# அம்புலிமாமா



பிப்ரவரி 2000

## பொருளடக்கம்

மதிமுகம் : 102 புன்னகை : 6




Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai - 600 026. Editor : Viswam


### சிறப்புப் படைப்பாக



வேதாளம் சொல்லும் கதை



இந்திய வரலாறு

பங்கு பெறுங்கள்
பரிசு பெறுங்கள்



Editor
VISWAM
Editorial Advisors
RUSKIN BOND
MANOJ DAS
Designing & Technical Advisor
UTTAM

**HEAD OFFICE**
Chandamama Buildings
Vadapalani, Chennai-600 026
Tel: 4841778/4842087
Fax: 4841778
e-mail: chandma@md4.vsnl.net.in

**OTHER OFFICES**

BHUBANESWAR
116-B, B.D.A. Duplex House
Baramunda
Bhubaneswar-751 003
Orissa. Phone: 550 534

DELHI
Flat No. 415, 4 th Floor
Pratap Bhawan
5, Bahadurshah Zafar Marg
New Delhi-110 002.
Phone: 3353406/7

MUMBAI
2/B Naaz Buildings
Lamington Road
Mumbai-400 004
Phone: 3889763-3886324-3877110
Fax: 3889670

**For
USA
Single copy
$2
Annual subscription
$20**



நிறுவனர் :
பி. நாகிரெட்டி சக்ரபாணி

# விழிப்புடன் இருப்போம்

காத்மண்டிலிருந்து புதுடில்லி நோக்கி வந்து கொண்டிருந்த இந்தியன் ஏர்லைன் விமானம் நடு வழியில் கடத்தப்பட்டது மிகவும் வருந்தத்தக்க விஷயம். அமைதியும், மகிழ்ச்சியும் நிறைந்த கிறிஸ்துமஸ் தினத்துக்கு முன் தினம் பயணிகள் துன்புறுத்தப்பட்டதும், கொலை நிகழ்வும் இந்தியாவுக்கு மட்டுமல்ல உலக மக்கள் அனைவருக்குமே வேதனை தரக் கூடிய விஷயமாகும். இத்தகைய மிருகத்தனமான செயல், மனிதர்கள் அனைவருக்கும் தலைகுனிவை ஏற்படுத்தும் செயலாகும். இப்படிப்பட்ட கொடும் செயல்களில் ஈடுபடுபவர்கள் உண்மையாகவே மனிதர்கள் தானா? மதம், அரசியல் எல்லாவற்றிலும் பயங்கரவாதத்தின் ஊடுருவலைக் காண முடிகிறது.

நிர்க்கதியாக நிற்கும் ஒரு மனிதனைக் கொல்பவன் உண்மையில் ஒரு கோழையே ஆவான். அவன் துணிச்சலுடன் மோதுவதற்கு பயந்தவன் என்பது மட்டுமல்ல நியாயத்தை நேருக்கு நேர் எதிர் கொள்ளத் திராணியற்றவனும் கூட. விரோதமும், பயமும் இணைந்து உருவாக்கிய பாவத்தின் சிருஷ்டிகள் தான் இவர்கள். இத்தகைய பயங்கரவாதத்தை எதிர்க்கவும், இந்தக் கொடுமைகளை முடிவுக்குக் கொண்டு வரவும் இன்றே நாகரீக நாடுகள் அனைத்தும் திட சங்கற்பம் பூண வேண்டும்.

கண்டகாரில் பயணிகள் அனைவரும் விடுவிக்கப்பட்டது ஆறுதலான விஷயம் என்றாலும், அதற்காக நாம் கொடுத்த விலை மிக அதிகம். வருங்காலத்தில் இது போன்ற பயங்கரவாதத்தில் சிக்கிக் கொள்ளாமல் இருக்க மிகவும் எச்சரிக்கையாகவும் விழிப்புணர்வுடனும் அதே சமயம் ஒற்றுமையுடனும் செயல்படுவோம்.



# செய்திச் சுடர்

## பழங் காலத்து மீன்

முதலில் மீனாகத் தான் கடவுள் அவதாரம் எடுத்தார் என்று இந்தியர்கள் நம்புகிறார்கள். முதல் மீன் எப்போது தோன்றியது? சமீபத்திய ஆய்வுகளின் படி சீனாவில் உள்ள செங்ஜியாங் என்ற இடத்தில் 530 மில்லியன் வருடங்களுக்கு முன்பு வாழ்ந்து மடிந்த இரண்டு மீன்களைக் கண்டு பிடித்துள்ளனர். இவை ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபட்டுள்ளன. இரண்டுக்கும் பொதுவான மூதாதை மீன் இன்னும் 50




மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருக்கலாம் என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். முன்பு நம்பப்பட்ட முடிவை விட இது மேலும் 50 மில்லியன் ஆண்டுகள் மீனின் வயதை அதிகமாக்கி விட்டது.

## நம்மைச் சுற்றியுள்ள நஞ்சு

வாயு மண்டலத்தில் மாசு படிவதனால் வருடா வருடம் ஒரு லட்சம் மக்கள் பலியாகின்றார்கள் என்று உலக சுகாதார அமைப்பு மேற்கொண்ட ஆய்வுகள் கூறுகின்றன.

எனவே இத்தகைய நச்சுப் பொருட்கள் வாயுமண்டலத்தில் புகுந்து கொள்ள முடியாதபடி சமூகப் பொறுப்புணர்வுடனும், விழிப்புணர்வுடனும் நாம் நடந்து கொள்ள



வேண்டும். இதற்கு உதாரணமாக சில நாடுகளில் மோட்டார் சைக்கிளுக்குப் பதிலாக சைக்கிளைப் பயன்படுத்துவதைக் கூறலாம்.

## புயலின் காரணம்

ஒரிசாவில் ஆயிரக்கணக்கான மக்களைப் பலி கொண்ட புயலைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்.



அந்தப் பகுதியில் இருந்த காடுகள் அழிக்கப்படாது இருந்திருக்குமானால் இந்த அளவுக்கு அதிகமான பொருட்சேதமும், உயிர் இழப்புகளும் நேர்ந்திருக்காது, என கேம்பிரிட்ஜ் கடலியல் துறை ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்.

# இம்மாதம் பிறந்தவர் ஸ்ரீ அன்னை

ஸ்ரீ அரவிந்தரின் ஆன்மீகத் தத்துவங்களை உலகத்துக்குச் சொன்ன ஸ்ரீ அன்னை அவர்கள் பாரிசில் 21-2-1878 இல் பிறந்தவர் ஆவர்.

1914 இல் பாண்டிச்சேரி வந்த அன்னை ஸ்ரீ அரவிந்தரைச் சந்தித்தார். அரவிந்தரைப் பார்த்த மாத்திரத்திலேயே அவரை மனித சமுதாயத்தின் எதிர்காலத்தைக் கருத்தில் கொள்ளும் தமது உள்ளுணர்வின் வடிவமாக அன்னை உணர்ந்தார்.



மீண்டும் 1920இல் பாண்டிச்சேரி வந்த அன்னை தொடர்ந்து அங்கே நிலை கொண்டார். அவர் அங்கு நிரந்தரமாக இருந்த பின்னர் தாயைக் குழந்தைகள் கூட்டம் சூழ்வதைப் போல அரவிந்த ஆசிரமம் உன்னதமான ஒரு வளர்ச்சியைப் பெற ஆரம்பித்தது.

**அன்னையின் கருத்து-**

இயற்கையில் ஒரு பரிணாம வளர்ச்சி உள்ளது. அது கல்லில் இருந்து மரத்துக்கும், மரத்தில் இருந்து மிருகத்துக்கும், மிருகத்தில் இருந்து மனிதனுக்கும் செல்கிறது. இத்தகைய பரிணாம வளர்ச்சியில் மனிதன் என்பவன் இறுதிப்படியாக விளங்குகிறான். இவ்வாறு அவன் மேலே நிற்பதால் தன்னை விட உயர்ந்தது உலகில் வேறு எதுவுமே இல்லை என்று மனிதன் நினைக்கின்றான். இந்த விஷயத்திலே அவன் தப்புக் கணக்கு போடுகிறான்.

உடல் ரீதியாக அவன் மிருகமே அதாவது சிந்திக்கும், பேசும் மிருகம் என்பது மட்டுமல்லாமல் இயல்பான பழக்கங்களிலும் பிறவிக் குணங்களிலும் இன்னும் அவன் மிருகமாகவே விளங்குகிறான்.

இத்தகைய பூரணமற்ற பலனில் இயற்கை திருப்தியடைய மாட்டாது என்பதால் மிருகத்துக்கு அடுத்த படிநிலையாக மனிதன் என்பவன் உள்ளதைப் போல அவனுக்கும் அடுத்த படியாக இருக்கப் போகும் உயர் இனத்தை வெளித் தோற்றத்தில் மனிதனைப் போன்றே இருந்தாலும் உள்ளே அறியாமையின் ஆதிக்கத்தில் இருந்து விலகியதும் மனதுக்கு அப்பால் செல்லக் கூடியதுமான உயர் இனத்தை இயற்கையன்னை சிருஷ்டிக்க முற்படுவாள்.



## மிக்க நன்றி!

அம்புலிமாமா மீண்டும் பிரசுரிக்கப்படும் விஷயத்தில் நம் சக பத்திரிகைகள் காட்டிய ஆதரவும் உற்சாகமும் எமக்கு மிக்க மகிழ்ச்சியை அளிக்கிறது. ஆங்கிலத்திலும் மற்ற இந்திய மொழிகளிலும் வெளியாகும் பல பிரபல பத்திரிகைகள் இச்செய்தியை விவரமாகப் பிரசுரித்தன. இந்தியப் பண்பாட்டையும் அதன் உயர்வையும் கதைகள், மற்றும் பல தலைப்புகளின் கீழ் இளைஞர்களுக்குத் தெரியப்படுத்தும் அம்புலிமாமாவை, வெளியிடுவோரின் நோக்கத்தை பேட்டிகள் வாயிலாக பி.பி.சியும் தூர்தர்சன் மெட்ரோவும் (டி.வி. டுடே,ஆஜ்கல்) மக்களுக்குத் தெரியப்படுத்தின.

இம்முயற்சியில் ஒத்துழைப்பு தந்த பத்திரிகைகளுக்கும், தொலைக் காட்சி நிறுவனர்களுக்கும் எம் மனப் பூர்வ நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அம்புலிமாமாவும் அதன் மற்ற மொழிப் பதிப்புகளும் மீண்டும் வெளியிடப்படுவதை அறிந்ததும் தம் மகிழ்ச்சியைத் தெரியப்படுத்திய பலகோடி வாசகர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், பல்வேறு நிறுவனங்களுக்கும், ஏஜெண்டுகளுக்கும் எம் உள்ளம் கனிந்த நல்வாழ்த்துக்களை நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**பி.விஸ்வநாத ரெட்டி**
வெளியிடுவோர்.

# ஆக்கபூர்வமான போட்டிகள்

## அம்புலிமாமா வாசகர்களுக்கு

உங்கள் அறிவுத்திறனைக் காட்ட
பல்வேறு போட்டிகளில்
கலந்து கொள்ளுங்கள்.

**போட்டோ**
**வாக்கியப்போட்டி**





1. ஒன்றுக்கொன்று ஏதாவது வகையில் தொடர்புள்ள இரு போட்டோக்களை இளம்போட்டோகாரர்கள், அத்தொடர்பு பற்றிய விளக்கத்துடன் எமக்கு அனுப்பலாம். தேர்ந்தெடுக்கப்படும் (இரு) போட்டோக்களுக்கு பரிசு **ரூ.500/-**
2. ஒரு பழமொழியைப் பிரசுரிக்கிறோம்.



அதை விளக்கும் நிகழ்ச்சியையோ, உங்கள் சொந்த அனுபவத்தையோ அல்லது புதிய பழைய கதைகளையோ 300 சொற்களுக்கு மேற்படாமல் எழுதி அனுப்புங்கள்.

இம்மாதப் பழமொழி:
**'இந்தப்பழம் புளிக்கும்'**

தேர்ந்தெடுக்கப்பட்ட படைப்பிற்குப் பரிசு ரூ.500/-

உங்கள் படைப்பு பிப்ரவரி 29க்குள் எமக்குச் சேர வேண்டும். பரிசு பெற்ற படைப்பு மே மாத இதழில் பிரசுரிக்கப்படும்.

உங்கள் படைப்புகளை அனுப்ப வேண்டிய முகவரி : **அம்புலிமாமா ஆக்க பூர்வமான போட்டிகள்,** சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை - 600 026.

- ஆசிரியர்



வேதாளம் சொல்லும் கதை

# இயற்கையின் நியதி!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதனைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து 'மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் ஏன் இப்படிப் பிடிவாதமாய் ஒரு வேலையில் இறங்குகிறாய்? சூழ்நிலையாலோ அல்லது அதிர்ஷ்டத்தாலோ உலகில் ஒரு சிலர் தாழ்நிலையிலிருந்து உயர்நிலையை அடைவதும் உண்டு. உலகிலுள்ள எல்லா உயிரினங்களுக்



கும்இது பொருந்தும். ஆனால் சிலர் தமக்குக் கிடைத்த அதிர்ஷ்டத்துடன் கூடிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளாமலும் இருந்து விடுகி றார்கள். இதை விளக்க வீரபாகு என்ற ராட்சஸனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்' என்று கூறிக் கதையைச் சொல்ல லாயிற்று.

காஞ்சன நாட்டில் கணபதி சாஸ்திரி என்ற வயதான புரோகிதர் இருந்தார். ஒருமுறை அவர் தம் ஊரிலிருந்து வெகு தூரத்திலுள்ள ஊரில் ஒரு மாபெரும் பணக்காரர் வீட்டு விவாகத்தை நடத்தி வைத்து தமக்குக் கிடைத்த பெருந் தொகை யுடன் தம் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார்.

அவர் காட்டு வழியே வந்து கொண்டிருக்கையில் பாறைகள் நிறைந்த பகுதியில் ஒரு குகைக் குள்ளிருந்து ஒரு நீளமான கை வந்து அவரது இடுப்பை பலமாக பற்றியது. சாஸ்திரி துடித்துப் போய் சுற்றிலும் பார்த்தார். அப்போது குகைக்குள்ளிருந்து ஒரு ராட்சஸன் வெளியே வந்தான். அந்த நீண்டகை அவனுடையதுதான். அவன் கரகரத்த குரலில் 'அடே! ஒருகாலத்தில் உன் போன்ற ஆசார மானிடர்களை பிடித்து நான் விழுங் கியதே கிடையாது. ஆனால் இன்று உன்னை விழுங்கத்தான் போகி றேன்' என்று கூறி உறுமினான்.

ராட்சஸன் தன்னைச் சட்டென விழுங்காமல் சில வார்த்தைகள் கூறியதைக் கேட்ட சாஸ்திரிக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது. அவனிடம் நல்ல விதமாகப் பேசி எப்படியாவது அங்கிருந்து தப்பிப் போய்விட வேண்டுமென அவர் தீர்மானித்துக் கொண்டார். அதனால் அவர் அவனை வணங்கி 'ராட்சஸச் சக்கரவர்த்தியே! என் போன்ற அற்ப ஜீவன் உங்களைப் போன்ற புனிதமான உயர் பிறப்பினருக்கு ஆகாரமாவது நான் செய்த புண்ணியமே. ஆனால் நான் இப்பகுதிக்கு வந்த காரணமே வேறு. என் பெயர் கணபதி சாஸ்திரி. சோதிடப்புலி என்று நாடு முழு வதும் என்னை அறியும். முதலில் உங்களது பிறப்பின் ரகசியத்தைக்

கூற எனக்கு அனுமதி அளியுங்கள். அதைக் கேட்ட பிறகு நீங்கள் என்னை விழுங்கி உங்கள் பசியைத் தணித்துக் கொள்ளுங்கள்' என்றான்.

இதைக் கேட்ட வீரபாகு ஆச்சரியப்பட்டு சாஸ்திரியின் முன் மண்டியிட்டு உட்கார்ந்து' என் பிறப்பில் ஏதோ ரகசியம் இருக்கிறதா? அது என்ன? சட்டெனச் சொல்' என்று கேட்டான்.

சாஸ்திரி தம் தொண்டையை கனைத்துச் சரி செய்து கொண்டு 'இரண்டு தலைமுறை களுக்கு முன் இந்தக் காஞ்சன புரத்தை ஆண்ட வீரசிம்ம மன்னர் தாம் நீங்கள். இன்றும் மக்கள் உங்களைப் புகழ்ந்து பல சம்பவங்களை நினைவு கூர்ந்து வருகிறார்கள். இவ்வளவு புகழ் பெற்ற நீங்கள் ஒரு முனிவரின் சாபத்தால் ராட்சஸ ராகப் பிறந்திருக்கிறீர்கள். அரண்மனையில் பட்டு மெத்தையில் படுத்து அறுசுவை உண்டியை தினமும் மூன்றுவேளை சாப்பிட வேண்டிய நீங்கள் இங்கே கட்டாந்தரை மீது உருண்டு என் போன்ற அற்பர்களைப் பிடித்துத் தின்னும் நிலையில் இருக்கிறீர்களே. இது என்ன . கஷ்டகாலம்' என்று கூறித் தன் தலையில் அடித்துக் கொண்டார்.

வீரபாகுவும் 'கவலைப்படாதே, சாஸ்திரி! நீ என் பிறப்பின் மேன்மையைக் கூறியது கேட்டு மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். நான் இப்படியே தான் இருக்கப் போகிறேனா



அல்லது எனக்கு சாபவிமோசனம் கிடைக்குமா?'' என்று கேட்டான்.

அது கேட்டு சாஸ்திரி ஒரு பெருமூச்சு விட்டவாறே 'உங்களுக்கு சாபம் கொடுத்த முனிவர் தாம் உங்கள் சாபம் விலக வழி கூற வேண்டும். ஆனால் அவர் எப்போதோ இப்பகுதியை விட்டு இமயமலைக்குப் போய் விட்டார். அதனால் உங்களுக்கு சாபவிமோசனம் கிடைக்க வழி இல்லை. ஆனால் இதோ ராட்சஸ உருவில் இந்நாட்டின் மன்னனாகும் யோகம் உங்களுக்கு உள்ளது. நீங்கள் மன்னராகி விட்டால் உங்களுக்கு உணவைப் பற்றிய கவலை இராது. இந்தப் பாழும் குகையில் வாழாமல் அரண்மனையில் சுக போக வாழ்வு வாழலாம்' என்றெல்

லாம் கூறி அவன் மனதில் ஆசைகளை மூட்டினார் சாஸ்திரிகள்.

வீரபாகு சற்று யோசித்துவிட்டு 'சரி நான் இந்நாட்டின் மன்னனாகி விட்டால் இப்போதுள்ள இந்த நாட்டின் மன்னன் என்ன ஆவான்?' என்று கேட்டான். சாஸ்திரியும் 'உங்களது பலத்தின் முன் அவனால் நிற்க முடியுமா? நீங்கள் என்னுடன் வாருங்கள். நான் உங்களை மன்னனாக்குகிறேன். உம், கிளம்புங்கள்' என்றார்.

வீரபாகுவும் மிகுந்த உற்சாகத்துடன் கணபதி சாஸ்திரியோடு புறப்பட்டான். காட்டைக் கடக்கும்வரை பயந்து நடந்த சாஸ்திரி காட்டைக் கடந்ததும் பாட்டுப் பாடிக் கொண்டு வேக வேகமாக நடக்கலானார்.

இதை கவனித்த ராட்சஸன் 'என்ன சாஸ்திரி! காட்டில் இருக்கும் போது நடுநடுங்கிக் கொண்டிருந்தாயே. இப்போது உற்சாகத்துடன் நடக்கிறாயே. இதற்கு என்ன காரணம்?' என்று கேட்டான். அது கேட்டு சாஸ்திரி பலமாகச் சிரித்து 'காட்டில் நடந்து கொண்டிருந்த போது எந்தக் கொடிய மிருகம் எங்கிருந்து எப்போது வந்து என் மீது பாயுமோ என்று பயந்து கொண்டிருந்தேன். இப்போது நான் காட்டில் இல்லை. அதனால் பயமில்லாமல் உற்சாகத்துடன் இருக்கிறேன்' என்றார்.

அப்போது வீரபாகு 'காட்டில் இருப்பதுபோல இங்கு மிருகங்கள் இல்லையா? ஏன் இல்லை?' என்று கேட்டான் ஆச்சரியப் பட்டவாறே. கணபதி சாஸ்திரி இல்லை என்பதற்காகத் தலையை அசைத்தவாறே 'ராட்சஸ சக்ரவர்த்தியே! மீன்கள்



நீரில் வாழ்கின்றன. மனிதர்கள் கிராமங்களில் வாழ்கின்றார்கள். மனிதர்கள் காட்டிற்குள் சென்றால் மிருகங்கள் அவர்களைத்தாக்கிக் கொல்கின்றன். காடுகளிலுள்ள மிருகங்கள் கிராமங்களில் நுழைந் தால் மனிதர்கள் அவற்றை வேட் டையாடுகிறார்கள். எனவே எந்த உயிரினம் எங்கு இருக்க வேண்டு மோ அது அங்குதான் இருக்க வேண்டும். இதுதான் படைப்பின் அடிப்படை விதி' என்றார்.

அதன்பின் இருவரும் எதுவும் பேசாமல் கொஞ்ச தூரம் நடந்தார் கள். சற்று தூரத்தில் ஒரு குருகுலம் இருந்தது. அதில் மாணவர்கள் அம்பு எய்தல், வாட் போர், மற்போர் என்றெல்லாம் பழகிக் கொண்டிருந் தார்கள். சற்று தூரத்தில் ஒரு ஓலைக் குடிசை முன் ஒரு ஆசனத்தில் அந்த மாணவர்களின் குருவான வித்தியா நாதர் அவர்கள் கற்பதை எல்லாம் கண்காணித்து வந்தார்.

அதையெல்லாம் ஆச்சரியத் துடன் பார்த்த வீரபாகு 'சாஸ்திரி! இதெல்லாம் என்ன?' என்று கேட் டான்.

சாஸ்திரியோ தூரத்திலிருக்கும் வித்தியாநாதரைக் கைகூப்பி வணங் கியவாறே வீரபாகுவிடம் 'இது ஒரு குருகுலம். இதில் அரசகுமாரர் களும் பிரமுகர்களின் புதல்வர் களும் அதோ அமர்ந்திருக்கும் குருவிடம் எல்லாக் கலைகளையும் கற்று வருகி றார்கள். இவரை இந்த நாடே மரியாதையுடன் வணங்குகிறது. பல நாடுகளின் இன்றைய மன்னர்கள் இவரிடம் கல்வி பயின்ற மாணவர் களே. இவர் மட்டும் நினைத்தால் இந்த உலகையே வென்று ஆளவும்





முடியும்'' என்றார்.

அதுகேட்டு வீரபாகு 'அப்படியா? அப்போது இவர் ஏன் மன்னனாக ஆகாமல் சன்னியாசிபோல வாழ்ந்து வருகிறார்?' என்று கேட்டான். சாஸ்திரியும் 'அவர் மன்னராக வேண்டுமென்று ஒரு நாளும் விரும்பியதில்லை. அவர் விரும்புவதெல்லாம் நல்ல அரசகுமாரர்களையும் அறிவாளிகளையும் மக்களுக்கு அளிப்பது தான். அதைத் தன் கடமை என்று நினைக்கிறார்' என்றார்.

வீரபாகு அதைக் கேட்டு யோசித்தவாறே சாஸ்திரியுடன் செல்லாமல் வந்த வழியே காட்டிற்கு வேகவேகமாகச் சென்றான்.

கணபதி சாஸ்திரி பலமாகச் சிரித்து கைதட்டி உரத்த குரலில் 'ராட்சஸா! என்ன சமாசாரம்? ஏன் திரும்பக் காட்டிற்கே போகிறாய்? வா இங்கே' என்று கூவி அழைத்தார். ஆனால் வீரபாகு திரும்பிக் கூடப் பாராமல் மேலும் வேகவேகமாகப் போய்க் காட்டிற்குள் சென்று விட்டான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி 'மன்னனே! வீரபாகு காட்டிலிருந்து சாஸ்திரியுடன் வந்ததற்குக் காரணமே நாட்டின் மன்னனாகி எல்லா சுகபோகங்களையும் அனுபவிக்க வேண்டுமென்பதற்காகத்தானே! ஆனால் வித்தியாநாதரைப் பற்றிய விவரங்களை அறிந்ததும் ஏன் காட்டிற்கே திரும்பிப் போய் விட்டான்? போர்க்கலைகளில் கைதேர்ந்த வித்தியாநாதர் என்றாவது தன்னை கொன்று விடுவாரெனப் பயந்து விட்டானா? அல்லது கணபதி சாஸ்திரி தன்னை ஏமாற்றி அழைத்துப் போய் கொல்ல ஏற்பாடு செய்வார் என்று அவன் சந்தேகப்பட்டுத் திரும்பிச் சென்றானா? அவ்வாறு சந்தேகப்பட்டிருந்தால் வீரபாகு உடனேயே சாஸ்திரியைப் பிடித்து ஏன் விழுங்கவில்லை? என் இந்தக் கேள்விகளுக்கு உனக்கு சரியான விடைகள் தெரிந்திருந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்' என்றது.

விக்கிரமனும் 'வீரபாகு வந்த வழியே திரும்பிச்சென்றதற்கு நீ சொன்னவை எதுவும் காரணமல்ல. அவனாக யோசித்ததும், சாஸ்திரி

யுடன் வரும்போது அவரிடம் கேள்விகள் கேட்டு விடைகளைப் பெற்று அவை பற்றிச் சிந்தித்ததுமே காரணங்களாகும்.

சாஸ்திரி தனக்குத் தெரிந்த அளவில் இறைவனின் படைப்பில் ஜீவராசிகள் எந்தெந்த விதமாய் வாழ்ந்து வருகின்றன என்று வீரபாகுவிடம் கூறினார். ஒரு நல்லாசிரியர் என்ன செய்வார் என்பதையும் அவர் ராட்சஸனுக்கு எடுத்துரைத்தார்.

இதையெல்லாம் கேட்ட வீரபாகுவிற்கு ஒரு ராட்சஸன் எவ்வாறு வாழவேண்டுமென்பது புரிந்து விட்டது.

கொடிய மிருகங்கள் காட்டில் தான் வாழவேண்டும் என்றும் குருகுலம் நடத்தும் குரு சன்னியாசிபோல் விருப்பு வெறுப்பு இல்லாமல் வாழ்ந்து நல்ல மாணாக்கர்களை உலகிற்கு அளிக்க வேண்டும் என்றும் நியதி இருப்பதால் அவையெல்லாம் அவரவர்களது கடமை என்பதை வீரபாகு அறிந்து கொண்டான்.

எனவே ராட்சஸனாகிய அவனுக்குத் தன் கடமை என்ன என்பது தெரிந்து விட்டது. அதனால்தான் அவன் தான் வசித்து வந்த காட்டிற்கே போய் விட்டான்' என்று கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலைந்துவிடவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக்கிளம்பிப் போய் வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# புத்திசாலிதான்!

பாறையூர் பரமசிவத்தின் மகன் பசுபதி. அவனை பெரும் புத்திசாலி என்றே எல்லோரும் பாராட்டி பேசுவர். ஒருமுறை பரமசிவத்தின் உறவினர்கள் வெளியூரிலிருந்து அவனைப் பார்க்க வந்திருந்தார்கள். அவர்கள் ஒருவார காலம் தங்கினார்கள்.

தம் ஊருக்குக் கிளம்பும் போது அவர்களில் ஒருவன் தம் கையில் ஒரு வெள்ளிக் காசையும் செப்புக் காசையும் வைத்துக் கொண்டு பசுபதியைக் கூப்பிட்டு ''பசுபதி! உன் புத்திசாலித் தனத்திற்கு ஒரு பரீட்சை வைக்கிறேன். இந்த இரு நாணயங்களில் ஒன்றை நீ எடுத்துக் கொள் என்று நான் சொன்னால் நீ எதை எடுத்துக் கொள்வாய்?'' என்று கேட்டார்.

பசுபதி சற்றும் தயங்காமல் அவர் கையிலிருந்து செப்புக் காசை எடுத்துக் கொண்டான்.

இது கண்டு அந்த உறவினரும் மற்றவர்களும் திடுக்கிட்டு அவனைப் பார்த்து ஏளனமாகப் புன்னகை புரிந்தார்கள். புத்திசாலி எனக் கருதப்பட்ட பசுபதி மக்கு போல செப்புக் காசை எடுத்தானே, அவன் மக்குதான் என தீர்மானித்தனர்

இந்த சமாச்சாரம் மறுநாள் பறையூர் முழுவதும் பரவிவிட்டது. ஊராரும் பசுபதி புத்திசாலி இல்லை என்றும் மகா மக்கு என்றும் பேசிக் கொள்ளலானார்கள். அன்று முதல் அவனைப் பரீட்சிப்பது அவர்களுக்கு ஒரு வேடிக்கையாகப் போய் விட்டது.

தினமும் யாராவது ஒருவன் தன் கையில் ஒரு வெள்ளிக் காசையும் ஒரு செப்புக் காசையும் வைத்துக் கொண்டு இவற்றில் உனக்கு எது வேண்டுமோ அதை எடுத்துக் கொள் என்று பசுபதியிடம் கூறுவான். அவனும் செப்புக் காசைத் தான் எடுத்துக் கொள்வான். இதைக் கண்டு அங்கு கூடியுள்ளவர்கள் சிரிப்பார்கள் இப்படியே கொஞ்ச

நாட்கள் கழிந்தன.

ஒரு முறை பசுபதியைக் காண அவனது உறவினர் வேலப்பன் வந்தான். பசுபதியைப் பற்றி அவ்வூரார் கேலியாகப் பேசி அவன் மகாமக்கு எனக் கூறுவதைக் கண்டான். ஒரு வாரம் தங்கிய பின் வேலப்பன் தன் ஊருக்குக் கிளம்பும் நாளன்று பசுபதியைக் கூப்பிட்டு ''பசுபதி! இதோபார் என் கையில் ஒரு வெள்ளிக் காசும் ஒரு செப்புக்காசும் உள்ளன. அவற்றில் உனக்கு எது வேண்டுமோ அதை எடுத்துக் கொள்'' என்றான்.

பசுபதியும் எப்போதும் போல செப்புக் காசை எடுத்துக் கொண் டான்.

''பசுபதி! வெள்ளிக் காசு செப்புக் காசைவிட அதிக மதிப் பானதாயிற்றே. அதை எடுத்துக் கொள்ளாமல் ஏன் செப்புக்காசையே எடுத்து வருகிறாய்?'' என்று கேட்டான் வேலப்பன்.

பசுபதி அதைக்கேட்டு புன்னகை புரிந்தவாறே ''மாமா! இந்த பரீட்சைகளில் எல்லாம்நான் மட்டும் முதல் தடவையில் வெள்ளிக் காசை எடுத்திருந்தால் அதன் பிறகு என்னை யாரும் பரீட்சித்திருக்க மாட்டார்கள் புத்தி சாலி என்று பாராட்டுவார்கள்.

ஆனால் நான் செப்புக் காசை எடுத்ததால் என்னை மக்கு என எண்ணி கேலியாக என்னை மீண்டும் மீண்டும் பரீட்சிக்கிறார்கள். அதனால் என்னிடம் நிறைய செப்புக் காசுகள் சேர்ந்து விட்டன. இவை ஒரு வெள்ளிக் காசை விட அதிக மதிப்புடையவைதானே'' என்று கேட்டான்.

அது கேட்டு வேலப்பன் ''நீயா மக்கு? இல்லை மகாபுத்திசாலி தான்'' எனக் கூறி சில வெள்ளிக் காசு களைக் கொடுத்து விட்டுப் புறப்பட்டான்.



# திருடனின் சிரிப்பு

ஒரு குள்ளன் ஊர் ஊராகத்திரிந்து தன் நகைச் சுவைப் பேச்சால் சிரிக்க வைத்து மக்கள் கொடுக்கும் காசுகளைக் கொண்டு வாழ்ந்து வந்தான்.

ஒருநாள் அவன் வேறொரு ஊருக்குப் போய்க் கொண்டிருக்கையில் ஒரு திருடன் கோடாலியை எடுத்துக் கொண்டு அந்தக் குள்ளனை நோக்கி வந்து கொண்டிருந் தான்.

அவன் தன் பயத்தை வெளிக் காட்டாமல் ''கடவுள் தான் எவ்வளவு உயர்ந்தவர்! தகிக்கும் வெயிலையும் கொடுத்து அதிலிருந்து தப்ப குளிர்ச்சியான நிழலையும் கொடுத்திருக்கிறாரே! என்றான். முரடனோ '' நீ யாரென்பது எனக்குத்தெரியும். உன் பேச்சால் என்னைக் கவர்ந்து சிரிக்க வைக்க முடியாது. பிறந்ததிலிருந்து நான் இது நாள்வரை சிரித்ததே இல்லை. சரி, சரி, உன்னிடமுள்ள பணப்பையை எடுத்து மரியாதையாகக் கொடுத்து விடு'' என்று எனக் கூறி அவனிடமிருந்த பணப்பையைப் பிடுங்கிக் கொண்டு உன் போன்றவர்களை உயிருடன் விட்டு வைப்பதே தப்பு. உன் தலையை வெட்டி எறிய வேண்டும்'' என்று உறுமினான்.

குள்ளனோ '' இது அநியாயம் நீ மட்டும் என் தலையை வெட்டி விட்டால் நான் இன்னமும் குள்ளனாகிவிடுவேன். அப்போது எல்லோரும் என்னை குள்ளக்குள்ளா என்று கேலி செய்வார்களே'' என்று கூறினான்.

அதைக்கேட்ட திருடன் உடனே சிரித்து விட்டான். ''இதுவரை சிரிக்காத என்னைச்சிரிக்க வைத்து விட்டாயே! இந்தா குள்ளக் குள்ளனாகவில்லை நீ! இந்த வார்த்தையைக் கேட்டாலே சிரிப்பு வருகிறது'' எனக் கூறிதான் பிடுங்கிக் கொண்ட பணப் பையைக் குள்ளனிடமே கொடுத்து விட்டுப் போய் விட்டான்!





# தங்க சிம்மாசனம்

2

*(கௌன்டனிய சாம்ராஜ்யம் ஏற்பட்டு ஐந்து நூற்றாண்டுகள் கழிந்துபோது அந்த சாம்ராஜ்யம் சிறுசிறு நாடுகளாகப் பிரிந்தது. கௌண்டனிய நாட்டின் பத்தாவது தலைமுறையில் வந்த மன்னன் ஸ்ரீதத்தன். ஸ்ரீதத்தனின் ஒரே மகனான விஜயதத்தன் குருகுலத்தில் கல்விபயின்று கொண்டிருந்தான். அவனது படிப்பு முடிய ஓரிரு மாதங்களே இருக்கையில் உடனே அவன் தலைநகருக்கு வரவேண்டுமென அவனது தந்தையிடமிருந்து செய்தி வந்தது. தலைநகருக்கு வந்த விஜயதத்தன் கௌண்டனிய நாட்டுச் செல்வத்தைக் கொள்ளையடிக்க அண்டை நாடுகள் சதித் திட்டம் தீட்டுவதாகத் தன் தந்தை கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்தான். - அதன் பிறகு)*

ஸ்ரீதத்தன் தான் கூறிக் கொண்டிருந்ததைத் தொடர்ந்து 'தன் மகனின் விருப்பம் மராளனுக்குப் பெரும் பிரச்சினையாகி விட்டது. அவனும் மாதவ சேனனைப் பற்றிய விவரங்களைச் சேகரித்த பிறகே தன் மகனுக்கு பதில் கூறுவது எனத் தீர்மானித்தான்! எனக் கூறி மேலும் சொல்லலானான்.

'இந்த மாதவசேனன் நமக்கு உறவினன் என்ற காரணத்தால் நம்மை தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக மராளன் முயன்று வருகிறான். சுயம்வரத்தில் வசுமதி மாதவசேனன் கழுத்தில் மாலையைப் போட்டாள் என்பதற்காக அவன் அவளை மணந்து கொண்டான். அவனுக்குப் பணத் தாசைதான் அதிகம் என்பதை மராளன் ஒற்றர்கள் வாயிலாகத் தெரிந்து கொண்டான்.

மாதவசேனனின் இந்த பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு தன் கோட்டையை நன்கு கட்டிக் கொள்ள மராளன் தீர்மானித்துக் கொண்டான். எனவே தன் தலைநகரில் சிறப்பாக நடத்தப்படும் தேர்த்திருவிழாவிற்கு வரும்படி அவன் மாதவசேனனுக்கு அழைப்பு விடுத்தான்.

இதுவரை இல்லாமல் திடீரென சூரியதேவத் தேர்த்திருவிழாவிற்கு வரும்படி மராளன் அழைப்பு விடுத்தது கண்டு மாதவசேனன் ஆச்சரியப் பட்டான். ஆயினும் கடவுளை ஆராதிக்கும் விழா என்பதால் அந்த அழைப்பை ஏற்று தன் குடும்பத்தோடு சம்பக நாட்டிற்குச் சென்றான்.

சம்பக மன்னர்கள் ஒவ்வொரு ஆண்டிலும் சூரியதேவனுக்கு விழா எடுப்பது வழக்கம். தை மாதம் ரத சப்தமியன்று சூரியதேவனின் விக்கிரகத்தைத் தேரில் வைத்து அந்த தேரை அரச குடும்பத்தைச் சேர்ந்த ஏழு பேர்கள் இழுத்துச் செல்வார்கள். அந்த எழுவரில் அந்த நாட்டு அரசனும் அரச குமாரனும் கண்டிப்பாக இருப்பார்கள். ஆனால் அந்த ஆண்டில் அரசகுடும்பத்தவரில் ஒருவருக்கு பதிலாக மாதவ சேனனைத் தேர் இழுப்போரில் சேர்த்தான்.

தன்னோடும் தன் மகனோடும் சேர்ந்து மாதவசேனனைத் தேர் இழுக்க வைத்த மராளன் மக்களிடம் சொன்னான். ''வீட்டிற்குவரும் விருந்தாளி நம் உறவினரே என சாஸ்திரங்கள் கூறுகின்றன். எனவே இவரை என் குடும்பத்தவர்களில் ஒருவராகக் கருத என்னுடன் சேர்ந்து சூரிய தேவனின் தேரை இழுக்கும்படி வேண்டினேன். அவரும் பெருந்தன்மையுடன் என் வேண்டுகோளை ஏற்று தெய்வ கைங்கரியத்தில் ஈடுபட்டார்'' எனக் கூறினான்.

இதைக் கேட்ட மாதவசேனன் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிப் போனான். அன்றைய மதிய விருந்திற்குப் பின் அவன் மராளனிடம் தனக்கு இவ்வளவு உயரிய மரியாதை காட்டியதற்காக தன் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொண்டான். இருவரும் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது மராளன் ''நான் ஒரு முக்கியமான விஷயத்தை உங்களிடம் கூறுவதா அல்லது வேண்டாமா என்ற தயக்கத்தில் தான் இருக்கிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட மாதவசேனன் ஆச்சரியப்பட்டவனாய் 'என்னிடம் கூறுவதற்குத் தயக்கமா? அப்படி என்ன பெரிய விஷயம்? நீங்கள் சற்றும் தயங்காமல் தாராளமாக



அதைக் கூறலாம்' என்றான். மராளனும் சற்று சங்கோசப்படு பவன்போல ''எங்கள் நாட்டிற்கு வருமுன்பே உங்கள் மகள் ஸ்ரீலேகாவின் குணாதிசயங்கள், அழகு பற்றி எல்லாம் எங்களுக்கு தெரிய வந்தது. அதையெல்லாம் கேட்ட என் மகன் ஸ்ரீலேகாவைத் தான் மணக்க விரும் புவதாக என்னிடம் கூறினான். ஆனால் நானோ அவனிடம் 'மகனே! கௌண்டினிய நாட்டின் இளவரசன் அவளுக்கு உறவினன். அவளுக்கு ஏற்ற மணாளனும் கூட. ஒருவேளை அவளை அவனுக்குத் திருமணம் செய்து வைக்கத் தீர்மானிக்கப்பட் டிருக்கிறதோ?'' எனக் கூறிச் சற்று நிறுத்திவிட்டு மாதவசேனனைப் பார்த்தான்.

மாதவசேனனும் 'ஏன் நிறுத்தி விட்டீர்கள்? தொடர்ந்து கூறுங்கள்' என்று சொல்லவே மராளனும் ''என் மகன் என்ன சொன்னானென்றால் 'அப்பா! ஒரு காலத்தில் கௌண்டனிய சாம்ராஜ் யம் என்று ஒன்று இருந்திருக்கலாம். இன்றோ அது நம் நாட்டைப் போல ஒன்றுதானே. எந்த ஒரு மாவீரனும் அதனைவென்று தனதாக்கிக் கொண்டுவிடலாம். அப்படிப்பட்ட மாவீரனை உயரிய க்ஷத்திரிய குலத்தில் பிறந்த பெண் விவாகம் செய்து கொள்வாள். அதனால் ஸ்ரீலேகா என்னை மனதார விரும்பு வாள் என்பதில் சற்றும் சந்தேக மில்லை. நான் அவளை மணந்தபின்



தென்னாட்டு நாடுகளை வென்று அவளை அந்த மாபெரும் சாம்ராஜ்ஜியத்தின் சக்ரவர்த் தினியாக ஆக்குவேன். மேலும் ஆண் குழந்தையே இல்லாத அவளது தந்தையை என் தகப்பனாராகக் கருதுவேன் அவருடைய நாடும் பிறகு எனக்குத்தானே'' இவ்வாறு அவன் கூறியதைக் கேட்டு எதுவும் பேச முடியாமல் போனேன்' என்று கூறிச் சற்று நிறுத்திப் பிறகு தொடர்ந்தான்.

'நான் என் மகனிடம் 'மகனே! நாம் சம்மந்தம் செய்து கொள்ளபோகிற வருடன் நட்புடன் இருக்க வேண்டும். இதுபற்றி முதலில் காளிந்தி மன்னர் மாதவசேனரிடம் பேசிப் பார்க்கிறேன். அவர் என்ன

சொல்கிறார் என்பதைக் கேட்டுக் கொண்டு அதன்படி நடப்போம். நீ அவசரப்படாதே' என்றேன் இது தான் விஷயம். இதைச் சொல்லத் தான் தயங்கினேன்.''

இவ்வாறு மராளன் கூறியதைக் கேட்டு மாதவசேனன் திகைத்துப் போனான். பிறகு அவன் மராளன் கூறியதை எல்லாம் நினைத்துப் பார்த்தான். தென்னிந்திய நாடுகள், கௌண்டனிய நாடு சக்ரவர்த்தினி என்ற பட்டம் - இந்தச் சொற்களெல் லாம் அவனது காதுகளில் ஒலித்துக் கொண்டே இருந்தன. அவற்றை எண்ணி எண்ணி அவன் அப்போதே மனக் கோட்டை கட்டலானான். அதுபற்றி தன் மகளிடமும் தன் மனைவியிடமும் பேசி முடிவெ டுக்க வேண்டும் என்பதைக் கூட அப்போது அவன் மறந்து போனான்.

அதன் பிறகு அவர்களிருவரும் மூன்று மணிநேரம்பேசிக் கொண்டி



ருந்தார்கள். மராளன் தன் பேச் சாலேயே மாதவசேனனை மயக்கி தன் மகனுக்கே ஸ்ரீலேகாவை மணம் செய்து கொடுக்கச் சம்மதிக்க வைத்துவிட்டான்.

இதனை ஸ்ரீதத்தன் தன் மகன் விஜயதத்தனிடம் கூறி 'குருகுலத் தில் உன் படிப்பு முடிய இன்னமும் ஆறுமாத காலமாகும். குரு கிருஷ்ண சந்திரர் மேலும் கொஞ்சகாலத் திற்குத் தம்மோடு வைத்துக் கொண்டு நவராத்திரி பூஜை முடிந்ததும் உன்னை இங்கு அனுப்பு வதாகச் தீர்மானித்திருந்தார். இந்த விஷயம் கூட மராளனுக்குத் தெரிந்து விட்டது. நீ இங்கு வந்து சேர்வதற்கு முன் நம் நாட்டை முற்று கையிட்டுக் கைப்பற்ற அண்டை நாட்டு மன்னர்கள் திட்டமிட்டிருக் கிறார்கள்.

ஒவ்வொரு ஆண்டிலும் சித்திரை மாதத்தில் மாதவசேனன் வந்து போவதுபோல இந்த ஆண்டிலும் வந்துவிட்டுச் சென்றான். அப்போது நம் படை பலம் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டிருக் கிறான். அடுத்த மாதம் காளிந்தி, சம்பகம், குந்தனம் ஆகிய மூன்று படைகளும் ஓரிடத் தில் கூடி சிறப்புப் பயிற்சி பெறும். அதற்குப் பின் வரும் ஆனிமாதத்தில் மேகங்கள் நிறைந்து வெளிச்சம் குறைந்து லேசாக மழையும் பெய்ய ஆரம்பிக்கும்.

இந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டு அம் மூன்று நாடுகளின் படைகளும் நகர ஆரம்பிக்கும் இதுதான் அவர்களது ரகசியத் திட்டம்' என்று சொன்னான்.

விஜயதத்தனும் 'ஓ! இப்படியா திட்டம் வகுத்திருக்கிறார்கள்!' என்று ஆச்சரியப்படவே ஸ்ரீதத்தனும் 'இப்போது மூன்று நாட்டுப் படைகளும் ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கும். விரை விலேயே நம் நாடு பயங்கரப் போர்க்களமாக மாறிவிடப் போகிறது. திடீரென இப்படி ஒரு பயங்கர நிலை ஏற்பட்டிருப்பதால் தான் உன்னை குருகுலத்திலிருந்து உடனே வரச் சொன்னேன். இப்படி ஒரு பயங்கர நிலை திடீரென ஏற்பட்டது கண்டு முதலில் நான் வெலவெலத்துத் தான் போனேன். ஆனால் நமது ராஜகுரு சிவானந்தன் எனக்கு தைரியம் அளித்து உற்சாக மூட்டவே எனக்கு நம்பிக்கை பிறந்தது' என்றான்.

விஜயதத்தனும் 'பேஷ்! நம்பிக் கைதான் நமக்கு ஆதாரம் என என் குருநாதன் அடிக்கடி கூறுவார்' எனவே ஸ்ரீதத்தனும் 'ஒற்றர்கள் வாயிலாக எனக்கு எதிரிகளின் நடவடிக்கைகளெல்லாம் தெரிய வரவே உன் எதிர்காலம் எப்படி இருக்குமோ என்ற கவலை எனக்கு ஏற்பட்டது. அதனால் உன் ஜாத கத்தை சிவானந்தரிடம் காட்டி உன் எதிர்காலம் எப்படி இருக்கும் என்று கேட்டேன்.

அவரும் 'மன்னனே! இளவர



சனின் ஜாதகம் கெட்டியானது. இப்போது நடக்கும் தசை அவ்வளவு சரியாக இல்லை. ஒரு பெரிய கண்டமும் இருக்கிறது. ஆனாலும் நல்ல கிரகங்களின் சேர்க் கையால் அவன் எல்லா கஷ்டகளிலி ருந்து விடுபட்டு வெற்றியே பெறு வான், இன்னும் பதினைந்து நாட்களுக்கு உன் மகன் இந்த ஊரை விட்டு எங்கும் போகக்கூடாது. இந்த ஜாதகத்தை இப்போது நான் பார்த்ததில் உன் மகனுக்கு விரை விலேயே ஒரு புதையல் கிடைக்கப் போவது தெரிகிறது. இந்தப் பௌர்ணமிக்குள் நான் காட்டும் இடத்தை அவன் தோண்டினால் ஒரு பெரிய புதையலை அடைவான். எனவே அவனை உடனே குருகுலத்



திலிருந்து இங்கே வரவழையுங்கள்' என்றார். அதனாலும் உன்னை உடனே குருகுலத்திலிருந்து வரச் சொன்னேன். நீயும் வந்துவிட்டாய். நாளைய மறுநாள் ஒரு நல்ல நேரம் குறிக்கப்பட்டுள்ளது. நாம் சிவானந் தருடன் போய் அவர் காட்டும் இடத்தில் தோண்ட வேண்டும்' என்று கூறினான்.

அதைக் கேட்ட விஜயதத்தன் 'தந்தையே! எனக்கு ஒரு சந்தேகம். நம் நாட்டை போர் அபாயம் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது இதை எதிர்க்க நம் படைகளைத் தயார் செய்வதா அல்லது அதை விட்டுவிட்டு புதையலை எடுக்கத் தோண்டுவதா? இதில் எது நல்லது என்று யோசியுங்கள்' என்றான்.

அதற்கு ஸ்ரீதத்தன் 'நானும் இப்படித்தான் சந்தேகப்பட்டுக் கேட்டேன். அவரோ எந்த நிலையிலும் முதலில் புதையலைத்தான் வெட்டி எடுக்க வேண்டும், பிறகு தான் மற்ற வேலை என்று கூறினார். அவர் சொல்வது நம் நன்மைக்கே என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. மேலும் இந்த வேலை இரண்டே நாட்களில் முடிந்துவிடும். எனவே ராஜகுரு சொல்கிறபடியே நாம் நடப்போம்' என்றான்.

அப்போது அறைக் கதவருகே யாரோ வந்து நிற்கும் சத்தம் அவர்களுக்குக் கேட்டது. இருவரும் நிமிர்ந்து பார்த்தார்கள். ஒரு வீரன் அங்கு நின்று உள்ளே வர மன்னனின் அனுமதியை நாடுவது போல இருந்தான். மன்னனும் அவனைத் தன்னருகே வரச் சொல்லி

'என்ன விஷயம்?' என்று கேட்டான். அவனும் 'யாரோ ஒருவன் வந்திருக்கிறான். அவன் உங்களைப் பார்க்க வேண்டுமென்று பிடிவாதம் பிடித்துக் கொண்டு நின்று கொண்டிருக்கிறான்' என்று தெரிவித்தான்.

மன்னனும் 'அவன்தான் யாரென்பதைத் தெரிவித்தானா ?' என்று கேட்க அவனும் 'யாரோ லட்சுமி தேவி என்பவர் கொடுத்த கடிதத்தைக் கொண்டு வந்திருக்கிறானாம். அதைத் தங்களிடம் நேரில் கொடுக்க வேண்டுமாம்' என்றான்.

மன்னனும் 'உம் சரி அவன் யாராக வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். அவனை இங்கே அனுப்பு. அவன் கொண்டு வந்துள்ள கடிதத்தில் என்னதான் இருக்கிறது என்று பார்க்கலாம்' என்றான்.

வீரனும் அவனை அழைத்து வந்தான். வந்தவன் விஜயதத்தன் அங்கு இருப்பதைப் பார்த்து திடுக்கிட்டு நின்றான். விஜயதத்தனும் அவனைக் கூர்ந்து கவனித்துவிட்டு மன்னனிடம் 'தந்தையே! லட்சுமி தேவியின் கடிதத்தைக் கொண்டு வந்திருப்பதாகக் கூறும் இந்த வாலிபன் வேறு யாருமில்லை. உங்கள் மருமகள் ஸ்ரீலேகாதான்' என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

ஸ்ரீதத்தனும் 'ஸ்ரீலேகாவா? வா, வா இதென்ன வேஷம்?' என்று கேட்கவே அவளும் கண் கலங்கி 'மாமா! வேறு வழி இல்லாததால் என்னை உங்களிடம் அனுப்பியுள்ள தாயும் இனி என்னைக்காக்க



வேண்டியது உங்கள் பொறுப்பு என்று என் தாயார் உங்களிடம் தெரிவிக்கச் சொன்னாள்' என்றாள்.

இதைக் கேட்ட ஸ்ரீதத்தன் ஆறுதல் கூறும்விதத்தில் 'உன் தாயார் உன்னை பத்திரமாகப் பார்த்துக் கொள்ள வேண்டியவர் இருக்கும் இடத்திற்குத்தான் அனுப்பி இருக்கிறாள்' என்றான். பிறகு விஜயதத்தனிடம் 'விஜயா! ஸ்ரீலேகா இங்கு வந்தது ஒரு நல்ல சகுனம்.

நம்மிடையே காந்தர்வ விவாகம் என்ற முறையில் திருமணம் நடைபெறுவது உண்டு. அந்த முறையில் உங்களிருவருக்கும் இப்போது திருமணம் செய்து வைக்க நினைக்கிறேன். என்ன சொல்கிறாய் ஸ்ரீலேகா?' என்று கேட்டான்.

ஸ்ரீலேகா புன்னகை புரிந்தவாறே நாணத்துடன் நின்றாள். விஜய தத்தனும் தன் தந்தை ஏன் அவசரப் படுகிறார் என்பதைப் புரிந்து கொண்டு குறுநகை புரிந்தான். இருவர் மனதையும் அறிந்து கொண்ட ஸ்ரீதத்தன் ஸ்ரீலேகாவின் வலக்கையை எடுத்து விஜய தத்தனின் வலக்கரத்தின் மீது வைத்து 'இப்போது முதல் நீங்கள் இருவரும் கணவன் - மனைவி ஆகிவிட்டீர்கள்' என்றான். அவர்களிருவரும் ஸ்ரீதத்தனின் கால்களில் விழுந்து வணங்கி அவனது ஆசிகளை பெற்றனர்.

(தொடரும்)





# பண்டிதர் தாய்மொழியை மறக்கவில்லை!

வண்டியூர் ஒரு சிறிய கிராமம். அங்கு ஒரு திண்ணைப் பள்ளிக் கூடம் கூடக் கிடையாது. அந்த ஊருக்கு தொலைதூரத்திலுள்ள காசியில் பல ஆண்டுகள் படித்து வேத சாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்த மாபெரும் பண்டிதர் கிருஷ்ண சாஸ்திரிகள் வரப் போகிறார் என்று கேள்விப் பட்டு அவர் பேசுவதைக் கேட்க அவ்வூரார் ஆவலுடன் இருந்தனர்.

காசியிலுள்ள பண்டிதர்களைப் போல அவர் உடை அணிந்திருந்தார். பஞ்சகச்சம் கட்டிய ஜரிகை வேஷ்டி, சிகப்பு நிறப் பட்டாலான நீளமான சட்டை, கழுத்தில் தங்கமாலை,... என ஒரு பண்டிதர் போல இல்லாமல் கல்யாண மாப்பிள்ளை போல அவர் காட்சியளித்தார்.

அவர் சொற்பொழிவு ஆற்றத்

தொடங்கியதும் எல்லோரும் உட்கார்ந்து அமைதியுடன் கேட்க லானார்கள். பண்டிதர்களிடையே பேசியும் வாதம் புரிந்தும் பழக்கப் பட்டதால் கிருஷ்ணசாஸ்திரி இந்தக் கூட்டத்திலும் உரத்த குரலில் சமஸ் கிருதத்தில் பிரசங்கம் புரிந்தார். அங்கிருந்தவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அப்போது ஒரு இளைஞன் எழுந்து துணிவாக ''ஐயா! நீங்கள் கூறியது எதுவுமே புரியவில்லை. பள்ளிப் படிப்பு வாசனைகூட இல்லாத எங்கள் முன் எங்களுக்குப் புரியாத விதமாகப் பேசினால் என்ன பிரயோஜனம்? அதனால் எங்களுக்கும் உங்க ளுக்கும் தெரிந்த நம் தாய்மொழியில் நீங்கள் சொற்பொழிவாற்றினால் எங்களால் புரிந்து கொள்ள முடியும்'' என்றான்.

சிறுவயதிலேயே காசிக்குப் போய் அங்கே முழுக்க சம்ஸ்கிருதத் திலேயே பண்டிதர்களுடன் பல ஆண்டுகள் பேசிப்பழகிவிட்டதால் கிருஷ்ணசாஸ்திரியால் சட்டென தன் தாய் மொழியான தமிழில் வேகமாகவும் கோர்வையாகவும் பிரசங்கம் புரிய முடியவில்லை. உரத்த குரலில் தமிழ் வார்த் தைகளைத் தேடித் தேடி தட்டுத்தடு மாறி ஏதோ சொல்லிக் கொண்டே போனார். அப்போதும் அவர் என்ன சொல்ல விரும்புகிறார் என்பது மற்றவர்களுக்குப் புரியவில்லை.

அதே சமயம் கிருஷ்ணசாஸ்திரி சொற்பொழிவு ஆற்றிக் கொண்டி ருந்த இடத்திலிருந்து சற்று தூரத்தில் சிலர் இரண்டு முரட்டுக்கடாக்களை மோதவிட்டு அவை சண்டை போட்டுக் கொண்டிருப்பதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந் தார்கள். அக்கடாக்களில் ஒன்று





பண்டிதர் கிருஷ்ணசாஸ்திரியைப் பார்த்து விட்டது. அவரது சிவப்புச்சட்டையைக் கண்டதும் அது மிரண்டுபோய் ஒரு துள்ளு துள்ளி தான் சண்டை போட்டுக் கொண்டிருந்த கடாவைவிட்டு விட்டுப் பண்டிதரை நோக்கி ஓடியது.

கூட்டத்தினர் மூலைக்கு ஒருவராய் ஓடினார்கள். தலையை தாழ்த்திக்கொண்டு தன்னை முட்ட வந்த கடாவைப் பார்த்த கிருஷ்ண சாஸ்திரி அது தன்னை வணங்கி ஆசிகள் பெற வருவதாக நினைத்து விட்டார். அதனால் அவர் ''ஆயுஷ்மான் பவ'' என்று கூறி அந்தக் கடாவை ஆசீர்வதித்தபோது அது அவரை லட்சியம் செய்யாமல் பாய்ந்து முட்டித்தள்ளியது.

பண்டிதர் கீழே விழுந்தார். அப்போது அவர் கடாவைக் கண்டபடி தமிழில் வேகவேகமாய் உரத்த குரலில் திட்டினார். அந்த வசைச் சொற்கள் அங்கு கூடியிருந்த எல்லோருக்கும் நன்கு புரிந்தது. அப்போது வாய்த்துடுக்குள்ள ஒருவன் ஓடிப்போய் கை நீட்டி கீழே விழுந்து கிடந்த சாஸ்திரியைத் தூக்கி நிறுத்தி ''ஐயா! இந்தக் கடாவிற்கு உங்களிடம் எப்படி மரியாதையாக நடந்து கொள்ள வேண்டுமென்று தெரியவில்லை. அது செய்தது பார்த்து மிகவும் வருந்துகிறோம். ஆனால் அது செய்த வேலையால் தான் நீங்கள் தாய் மொழியை மறந்துவிடவில்லை என்பது கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம்'' என்றான்!

**ஒரு உயரிய நாகரீகத்தின்**
**பல கட்டங்கள்**
**பரம்பரை பரம்பரையாக**
**உண்மையைக் காண ஆய்வு**

## 1. ஒரு காலத்தில் :
# சரஸ்வதி நதிக்கரையில்...

சோமநாதன் தன் வாழ்க்கையை வரலாற்றை போதித்து வந்ததில் கழித்தவர். இந்திய வரலாறு பற்றிப் பல ஆராய்ச்சிகள் புரிந்து அண்மை யில் பல்கலைக் கழக உத்தியோகத் திலிருந்து ஓய்வு பெற்றவர்.

அவரது பேரன் சேகர் தினமும் தனக்கு ஏற்படும் புதுப்புது சந்தேகங் களைக் கேட்கக் கேட்க சோமநாத னும் விளக்கமாக கூறுவார்.

அன்றும் சேகர் வழக்கம் போல தனது சந்தேகத்தை கேட்க ஆரம் பித்தான்.

''தாத்தா நம் பழங்கால நூல்கள் சரஸ்வதி நதியைப் பற்றிக் கூறுகின் றன. ஆனால் அது இருக்கும் இடம் கூட நமக்குத் தெரியவில்லையே. அந்த மாதிரி ஒரு நதி இருந்ததே இல்லை என்று ஒரு அறிஞர் அடித்துக் கூறுகிறார். ஆனால்... லான்ட்ஸ்லட் என்ற ஒரு உபகிரகம் அந்நதி ஓடிய நிலப்பகுதியைப் படமாக எடுத்துள்ளதாக இந்தச் செய்தித்தாள் கூறுகிறது. இமய மலையிலிருந்து கிளம்பிய இந்த நதியின் அகலம் பதினான்கு கிலோ மீட்டர் என்று இப்பத்திரிகை கூறுகிறது'' என்றான்.

சோமநாதனும் ''ஆமாம் உண்மைதான். சில ஆண்டுகளுக்கு முன் பால்ஹென்றி ப்ராங்போர்ட் என்னும் புகழ் பெற்ற புதைபொருள் ஆராய்ச்சியாளர் இந்த நதியைப் பற்றி நடத்திய ஆய்வில் கடும் வறட் சியினால் நாலாயிரம் ஆண்டுகளு க்கு முன்பே இந்நதி வறண்டு போய் மறைந்திருக்க வேண்டுமென்று கருத்து தெரிவித்துள்ளார். அந்நதி வறண்டு போனதற்கு வேறு ஏதாவது காரணம் கூட இருக்கலாம். சரஸ்வதி நதி மட்டும் மறைந்து போய் விட வில்லை. திருஷத்வதி என்னும் நதியும் கூட அதைப்போல மறைந்து போயிற்று.

ஆனால் சரஸ்வதி நதிக்கரையில் வாழ்ந்தவர்கள் அளித்த இலக்கியப் படைப்புகளும் நாகரீகமும் இன்றும் பெரும் செல்வமாக மிகுந்து உள்ளன. இவை நம் நாட்டின் உயர் நிலைய்ை உலகிற் குக் காட்டுகின்றன. அந்தப் படைப் புகளைத் தான் வேதங்கள் என்று கூறுகிறோம். அவை ரிக், யஜுர், சாம, அதர்வ என நான்கு வேதங் களாகும்'' என்றார்.

அப்போது சேகர் ''அப்படி யானால் நதிக்கரையிலிருந்து வேறி டங்களுக்குச் சென்ற போது தம் முடன் அந்த நூல்களையும் எடுத்துச் சென்றார்களா?'' எனக் கேட்கவே சோமநாதனும் அது கேட்டுச் சிரித்தவாறே ''அவர்கள் அந்தப் படைப்புகளை எடுத்துத் தான்

சென்றார்கள். ஆனால் அவை புத்தக வடிவில் இருக்கவில்லை. தம் ஞாபகசத்தி யால் தான் கொண்டு சென்றார்கள். அவர்களுக்கு எழுதப் படிக்க நன்கு தெரியும். ஆனால் அந்த வேத மந்திரங்களை மனப் பாடம் செய்து நினைவிலிருத்திக் கொள்வதைத் தான் வழக்கமாகக் கொண்டிருந் தார்கள்'' என்றார்.

''இது நம்பத்தக்கதாக இல்லை யே'' என்று சேகர் தன் ஐயத்தை வெளிப்படுத்தவே சோமநாதனும் ''ஆம் நம்மால் நம்ப முடியாதுதான். ஆனால் அதுதான் உண்மை. அந் நாட்களில் அவர்கள் வாழ்ந்த முறை நமது இக்கால முறையைப் போலல் லாது மாறுபட்டது.

அக்காலத்து மக்கள் அனைவ ருக்கும் வேதங்கள் மனப்பாடமாக இருந்தன என நான் கூற மாட்டேன். ஆனால் அவற்றை நினைவிலிருத் திக் கொண்டவர்களை ரிஷிகள் என் கிறோம். அவர்களே சமுதாயத்திற்கு வழி காட்டும் ஆசிரியர்கள். அவர் கள் ஒரே நிலையில் இருந்து ஞாபக சக்தி உடையவர்கள். வேத மந்திரங் களைச் சிறுவயதிலிருந்தே ஸ்வரத் தோடு கேட்டுக் கேட்டு மனப் பாடம் செய்து கொண்டவர்களே'' என்றார்.

சேகரும் ''அவர்கள் ஏன் அவ் வாறு சிரமப்பட்டிருக்க வேண்டும் தாத்தா?'' என்று கேட்டான்.

சோம நாதனும் ''நீ இப்படிக் கேட்பாய் என்றே எதிர்பார்த்தேன். நாம் ஏதாவது ஒன்றிற்காக சிரமப்படு கிறோம் என்றால் அது ஒரு நற்பயனுக்கும் மன மகிழ்ச்சிக்கும் தான். ஆனால் ரிஷிகள் அழியக் கூடிய பயனையும் கணப்பொழுதிற்கான ஆனந்தத்தையும் விரும்பினார்கள் என்று கூற முடியாது.

வாழ்க்கையில் எதிர்நோக்கும் முக்கிய பிரச்சினைகளுக்கும் சிக்கல்களுக்கும் தீர்வு காண தொடர்ந்து ஆராய்ச்சியை அவர்கள் மேற்கொண்டார்கள். நாம் எதற்காக வாழ்கிறோம், மரணத்திற்குப் பின் மனிதன் என்னவா கிறான், வாழ்வில் இன்னல்களுக்கு என்ன காரணம் என்பன போன்ற பல கேள்விகளுக்கு அவர்கள் விடைகளைத் தேடி





னார்கள். அக்கேள்விகளுக்கு வேதங்களில் விடைகள் உள்ளன என்று அவர்கள் நம்பினார்கள்'' என்றார்.

சேகரும் ''அதுசரி, இந்த வேதங்களை எல்லாம் யார் எழுதினார்கள்?'' என்று கேட்க சோமநாதனும் ''அது பெரும் ரகசியமே. நாம் கடிதங்களையும் புத்தகங்களையும் எழுதுவதுபோல வேதங்களை யாரும் எழுதி வைக்கவில்லை. ரிஷிகள் அவற்றைக் கேட்டுக் கேட்டு நினைவில் கொண்டார்கள். அதனால் அவை ஸ்ருதிகள் எனப்படுகின்றன. ஸ்ருதி என்றால் கேட்பது என்று பொருள். உயரிய நிலையிலிருந்து கொண்டு மனிதனை விழித்தெழச்செய்யத்தக்க அற்புதமான உண்மைகள் நல்ல சொற்களால் நிறைவாக்கியங்களாக வந்தன. என ரிஷிகள் நம்பினார்கள்'' என்றார்.



''அப்படிப்பட்ட உண்மைகள் என் மனதில் படிய வேண்டுமென விரும்பலாமா?'' என்று ஆவலுடன் சேகர் கேட்கவே சோமநாதனும் ''ஆகா! தாராளமாக. அவர்களும் நம்மைப் போன்ற மனிதர்களே அவர்களால் முடிந்ததென்றால் உன்னாலும் முடியும். மனிதன் மரணத்திற்குப் பின் என்ன ஆகிறான் என்பதை நசிகேதன் கண்டு கொண்டான். அப்போது அவனுக்கு உன்னைவிடக் குறைந்த வயதே'' என்றார்.

சேகரும் ''நசிகேதனா? இந்தப் பெயரை நான் எங்கேயோ கேட்டிருக்கிறேனே'' எனவே சோமநாதனும் ''கேட்டிருப்பாய். அவன் பெயர் பல்லாயிரம் ஆண்டுகளுக்குப்பிறகும் ஏன் நிலைத்திருக்கிறது என்று தெரியுமா?'' எனக் கேட்டார்.

தெரியாதென சேகர் கூறவே சோமநாதனும் கூறலானார்.

''வேதங்களின் கடைசி அங்கங்களே உபநிஷத்துக்கள். அவற்றில் முக்கியமான கடோப நிஷத்தில் நசிகேதனின் கதை வருகிறது.

நசிகேதனின் தந்தை வாஜசிரவன் என்ற முனிவர் ஒரு யாகம் செய்து தன்னிடமுள்ளவற் றை தானமாகக் கொடுக்கலானார். அவரருகே நின்று



அதை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்த நசிகேதன் ''அப்பா! உங்களிடம் உள்ளதை எல்லாம் தானம் செய்கிறீர்கள். என்னை யாருக்குக் கொடுக்கப் போகிறீர்கள்?'' என்று கேட்டான். இருமுறை அதே கேள்வியைக் கேட்டான். மூன்றாவது முறையில் அவன் கேட்டபோது அவனது தந்தை எரிச்சலடைந்து ''உன்னை எமனுக்குக் கொடுக்கிறேன், போ'' என்று கூறினார்.

நசிகேதன் எமனிடம் சென்றான். அப்போது எமன் எமலோகத்தில் இருக்கவில்லை. அதனால் மூன்று நாட்கள்வரை உணவும் உறக்கமும் இல்லாமல் எமன் வருகைக்காக நசிகேதன் காத்து நின்றான்

அவனது விடாமுயற்சியையும் பொறுமையையும் கண்டு எமன் மகிழ்ந்து போய் மூன்று வரங்களைத் தான் கொடுப்பதாயும் அவன் இஷ்டப்பட்டதைக் கேட்கலாம் என்றும் கூறினான்.

நசிகேதனும் ''நான் திடீரென மாயமாகிவிட்டதால் என் தந்தை பரிதவித்துக் கொண்டிருப்பார். அவருக்கு மனநிம்மதி கிடைக்க அருளுங்கள்'' என்றான்.

எமன் அந்த வரத்தைத் தரவே, இரண்டாவது வரமாக நசிகேதன் ''பசி தாகம் எடுக்காமல் மூப்பும் மரணமும் அடையாதுமுள்ள சொர்க்க ஞானத்தை எனக்கு அளியுங்கள்'' என்றான்.

எமனும் அந்த வரத்தையும் அளிக்கவே நசிகேதன் மூன்றாவது வரமாக ''மரணத்தின் பிறகு என்னவென்று எனக்குக் கூற வேண்டும்'' என்று கேட்டான்.

சிறுவன் ஒருவன் இம்மாதிரி கேட்பான் என்று எமன் எதிர்பார்க்கவில்லை. அதனால் அவன் ''மகனே! இது சாமான்னிய மானவர்கள் அறிய வேண்டிய விஷயமல்ல. அதனால் நல்ல விதமாய் வாழவோ அல்லது ஏராளமான செல்வத்தையோ கேள். கொடுக்கிறேன் என்றான்.

நசிகேதனோ ''நீங்கள் கூறும் இவையாவும் எனக்கு மகிழ்ச்சியைத் தராது. தயவு செய்து மரணத்தின் ரகசியத்தைக் கூறுங்கள்.





அது ஒன்றே எனக்குப் போதும்'' என்றான்.

அழியாததும் தூயதுமான ஆத்மா ஒரு உடலிலிருந்து வேறொரு உடலுக்குச் சென்றடையும் ரகசியத்தை எமன் நசிகேதனிடம் விளக்கிக் கூறினான். நசிகேதன் பூரண ஞானம் பெற்றுத் தன் வீட்டிற்குத் திரும்பி வந்தான். அவனும் மாபெரும் ரிஷியாகக் கருதப்பட்டான்!!

இவ்வாறு நசிகேதனின் கதையைச் சோமநாதன் கூறியதும் சேகர் ''எமலோகம் போய்த் திரும்புவதெல்லாம் உண்மையில் நடக்கக் கூடியதா?'' என்று கேட்டான்.

அவரும் ''இம்மாதிரிக் கதைகளை அப்படியே எடுத்துக் கொண்டு அலசிப்பார்க்கக் கூடாது. அதன் உட்கருத்தை அறிந்து கொள்ள வேண்டும். உண்மையில் முனிவர் கோபம் கொண்டு தன் மகனை எமனுக்கு தானம் செய்யும் அளவிற்குப் போயிருக்கவே மாட்டார். அப்படி கோபமடைந்திருந்தால் அவர் உபநிஷத்தில் இடம் பெற்றிருக்க மாட்டார். அவர் தன் மகனிடம் ஒரு மாபெரும் பொறுப்பை ஒப்படைத்தார் என்றே நான் நினைக்கிறேன். மரணத்தின் ரகசியத்தைத் தன் மகன் அறிந்துவர வேண்டுமென்று அவர் கட்டளையிட்டிருப்பார் என்றே நான் எண்ணுகிறேன். நசிகேதன் மூன்று நாட்கள் உணவும் உறக்கமும் இல்லாமல் அது பற்றி யோசித்திருக் கலாம் இந்த தியானத்திற்குப் பின் ஆத்மா மரணமடையாது என்ற உண்மையை அறிந்திருக்கலாம்'' என்றார்.

''ஆகா! நல்ல விளக்கம்'' எனக் கூறி சேகர் தன் தாத்தாவையே பார்த்துக் கொண்டு நின்றான்.

(தொடரும்)



காவேரிக்கரையோரமாய்.... 4

# தலக்காடு மணல்மேடுகள்

கருத்து : **ஜெயந்தி மகாலிங்கம்**
ஓவியம் : **கௌதம்சென்**




சோமநாதபுரத்திலிருந்து பனிரெண்டு கி.மீ. தூரத்தில் கபிலாநதி காவேரி நதியில் சேர்கிறது. இந்தக்கூடு துறையருகே திருமக்கூடல் நரசிபூர் என்ற சிறிய நகரம் உள்ளது. மூன்றுகூடல் எனப்படும் திரிகூடல் என்ற சொல் திரிந்து திருமக்கூடல் என்றாகியது. இங்கு ஸ்படிக சரோவரம் என்பது நிலத்தடியே சென்று காவேரி நதியில் கலந்துவிடுகிறது என்ற ஒரு நம்பிக்கையும் மக்களிடையே உள்ளது.

இந்த நரசிபூரில் அகத்திய முனிவர் ஆலயம் உள்ளது. நரசிபூரிலிருந்து சற்று தூரத்தில் காவேரியின் இடதுபுறமாய் மனித சஞ்சாரமே இல்லாத மணல் திட்டுகள் உள்ளன. இங்கு தலக்காடு என்ற ஊர் உள்ளது. ஒரு காலத்தில் கங்கவம்சத்து அரசர்களின் தலைநகரமாக இருந்தது. அதன்பின் இது சோழர்களின் வசமாகியது. இதற்கு ராஜராஜபுரம் என்ற பெயரும் இடப்பட்டது. இதற்குப்பின் விஷ்ணுவர்த்தனின் காலத்தில் ஹோய்சாலர்களின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. ஆனால் இப்போது அந்த ஊர் மணலடியே அமுங்கிக் கிடக்கிறது. சில இடங்களில் மணல்மேடுகள் 15 அடி உயரம் கூட உள்ளன. தலக் காடிற்கு இந்த அவலநிலை ஏற்பட ஒரு ராணியின்



**அலமேலம்மா**

**மூன்று சாபங்களைக் கொடுத்தாள்.**

சாபம் காரணம் என்று ஒரு கதை வழக்கில் உள்ளது.

ஸ்ரீரங்கப்பட்டணத்தில் விஜயநகர சாம்ராஜ்ஜியத்தின் பிரதிநிதியாக திருமலைராயன் என்பவன் இருந்தான். அவனது மனைவி ராணி அலமேலம்மா. திருமலைராயன் இறந்த பிறகு அவளிடமிருந்த விலையுயர்ந்த நகைகளை அபகரித்து வரும்படி மைசூர் மன்னன் உடையார் தன் வீரர்களை அனுப்பினார். இதை அறிந்து கொண்ட ராணி அலமேலம்மா காவேரி ஆற்றின் மறுகரையிலுள்ள மாலங்கிக்குத் தப்பி செல்லும் எண்ணத்தில் கிளம்பினாள். ஆனால் உடையாரின் வீரர்கள் அவளை விடாமல் பின் தொடர்ந்தார்கள். அதனால் அவள் தான் அணிந்திருந்த விலையுயர்ந்த நகைகளோடு ஆற்றில் குதித்து விட்டாள். தண்ணீரில் மூழ்கியவாறே அவள் மூன்று சாபங்களைக் கொடுத்தாள். ''தலக்காடு மணலில் அமுங்கிப் போகட்டும். மாலங்கி அருகே மரணச் சுழல் ஆற்றில் ஏற்படட்டும். ஆண் துணையற்ற என்னைத் தாக்க முயன்ற மைசூர் மன்னர்களுக்கு வாரிசே இல்லாமல் போகட்டும்''


தலக்காட்டு வைத்தீஸ்வரா ஆலயம்

ராணி அலமேலம்மாவின் சாபங்கள் முழுமையாகப் பலித்து விட்டன என்றே அப்பகுதி மக்கள் நம்புகிறார்கள். தலக்காடு மணலால் நிறைந்து அமுங்கிப்

யானைகள் மரங்களைப் பூஜிப்பதை வேட்டைக்காரர்கள் பார்த்தார்கள்.

போயிற்று. மாலங்கி அருகே ஆற்றில் மரணச் சுழல் ஏற்பட்டு விட்டது. உடையார் மன்னர்களின் வம்சாவளியைப் பரிசீலித்ததில் அவர்களில் பலர் வேறு குழந்தைகளை சுவீகாரம் எடுத்துக் கொண்டார்கள் என்றே தெரிகிறது.

மணல்மேடுகளில் சுமார் முப்பது ஆலயங்கள் அமுங்கிப் போய் விட்டதாகக் கூறுகிறார்கள். ஆங்காங்கே சில ஆலயங்களும் தென்படு கின்றன. கங்கவம்ச மன்னர்கள் கட்டிய பாதாளீஸ்வரர் ஆலயமும், மருளீஸ்வரர் ஆலயமும், ஹோய்சால மன்னர்கள் கட்டிய கீர்த்திநாராயணர் மந்திரமும், சோழர்கள் கட்டிய வைத்தீஸ்வரர் ஆலயமும் அவற்றில் முக்கியமானவை. இந்த ஆலயங்களில் இன்னமும் பூஜைகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நவம்பர் டிசம்பர் மாதத்தில் நடக்கும்.

பஞ்சலிங்க தரிசன உற்சவ சமயத்தில் விசேஷ பூஜைகளும் நடை பெறுகின்றன. இச்சமயத்தில் மட்டுமே தலக்காட்டில் ஆயிரக்கணக் கானவர்களைக் காண முடியும்.

பாதாளீஸ்வரர் ஆலயமும், மரளீஸ்வரர் ஆலயமும் மிகவும் பழைமையா னவை. பாதாளீஸ்வர சிவலிங்கம் காலையில் சிவப்பாயும் உச்சி வேளையில் கருப்பாயும் சாயங்காலம் வெள்ளையாகவும் மாறுவதாகக் கூறுகிறார்கள். கீர்த்திநாராயண மந்திரத்திலுள்ள விஷ்ணு விக்கிரகம் மூன்று மீட்டர் உயரமானது. இன்றும் அதற்கு பூஜைகள் செய்யப்படுகின்றன. தலக்காட்டில் வைத்தீஸ்வரர் ஆலயம் தான் மிகப் பெரியது. பதிநான்காம் நூற்றாண்டில் கட்டப்பட்ட இந்த சிவன் கோவில் பற்றிய கதை இவ்வாறு கூறப்படுகிறது.



நரசிபூர் அருகேயுள்ள கூடுதுறை



கங்காசுக்கி நீர்வீழ்ச்சி

சோமநாதர் என்ற முனிவர் தம் சீடர்களோடு காவேரி நதிக்கரையிலிருந்து சிவனை ஆராதித்து வந்தார். அவரது விரதம் முடியும் முன்னே அவரையும் அவரது சீடர்களையும் காட்டு யானைகள் கொன்றுவிட்டனவாம். மறுபிறப்பில் அவர்கள் அதே காட்டில் யானைகளாகப் பிறந்தார்களாம். அவர்களை அனுக்கிரகிக்க சிவபிரான் சிவலிங்க வடிவில் அங்கு ஒரு மரத்தடியே இருந்தாராம். யானைகள் தினமும் காவேரி நதியில் குளித்துவிட்டு தாமரை மலர்களை எடுத்து வந்து அந்த மரத்தடி சிவலிங்கத்திற்கு அர்ப்பணிக்குமாம். இதனை தலக்காடு வேடுவர்கள் பார்த்தார்களாம். ஒரு நாள் அவர்கள் அந்த மரத்தை வெட்ட முயன்றார்களாம். கோடாலி அம்மரத்தில் பட்டதும் அதிலிருந்து ரத்தம் கசியலாயிற்று. அப்போது ஒரு அசரீரி வாக்கு அக்காயத்திற்கு இலைகளை வைத்துக் கட்டுப் போடும்படி கூறியதாம். வேடுவர்கள் அவ்வாறே செய்ய காயத்தின் ரத்தம் பாலாக மாறியதாம். அந்தப் பாலை வேடுவர்கள் குடிக்கவே அவர்கள் யானைகளாகி சொர்க்கலோகம் அடைந்தார்களாம். இதற்குச் சில நாட்களுக்குப்பின் இங்கு ஆலயம் கட்டப்பட்டது.

மணல் அடித்து காடுகள் அழியாதிருக்க வனத்துறையினர் அப்பகுதியில் புதிதாக மரக் கன்றுகளை நட்டு வருகிறார்கள். அப்போதும் ஒவ்வொரு ஆண்டிலும் அப்பகுதியில் 3 கி.மீ. க்கு மணல் அடிக்கப்படுகிறது.



## பிள்ளையும் மாப்பிள்ளையும்

வெல்லத்தூரில் வெங்கடாசலத்தின் வீட்டிற்குத்தான் வெளியூர்க்காரர்கள் வந்து தங்கிப் போவார்கள். அவரும் வந்த விருந்தாளிகளுக்கு முகம் சுளிக்காமல் உபசரித்து உணவு அளித்து அனுப்புவது வழக்கம். ஒரு நாள் அவர் வீட்டிற்கு சிவகுரு என்ற இளைஞன் வந்தான். அவன் ஒரு கவிஞன். இசைக் கலையிலும் பயிற்சி பெற்றவன். தலைநகருக்குப் போய் ஒரு நல்ல உத்தியோகத்தில் அமரும் நோக்கத்துடன் அவன் போய்க் கொண்டிருக்கையில் தான் வழியில் வெல்லத்தூரில் தங்கினான்.

சிவகுரு தலைநகருக்குப்போகும் காரணத்தைக் கேட்டறிந்து கொண்ட வெங்கடாசலம் அவனிடம் ''அங்கு எனக்குத் தெரிந்த இருவர் உள்ளனர். அவர்களில் ராமைய்யன் என்பவன் அவ்வூர் பரந்தாமனின் மாப்பிள்ளை. அவனும் உன்னைப் போல ஒரு கவிஞன். பிறருக்கு உதவுபவன். எனவே அவன் உனக்குக் கண்டிப்பாக உதவி புரிவான். மற்றவன் சுப்பைய்யன் என் இரண்டாவது மகன். நல்ல பாடகன். அவனும் பிறருக்கு உதவுபவனே. ஆனால் இந்த இருவரும் தமக்கு இணையானவர்கள் யாருமே இல்லை என்று நினைத்துக் கொண்டிருப்பவர்கள். உன்னை நான் அவர்களிடம் அனுப்பியதாக நீ அவர்களிடம் கூறினால் அவர்கள் உனக்கு உதவவே மாட்டார்கள். அதனால் என்பெயரைக் கூறாமல் அவர்களது உதவியைப் பெற்றுக் கொள்'' என்று கூறினார்.

சிவகுரு தலைநகர் சென்றதும் முதலில் ராமையயனைக் கண்டு 'சாதாரணக் கவிஞனான நான் தங்களது உதவியால் இவ்வூரில் நல்ல உத்தியோகத்தை அடைந்து நிலைத்திருக்க விரும்புகிறேன். தாங்கள் தயவு செய்து என்னைப் பரீட்சித்து என் தகுதியைத் தெரிந்து கொண்டு எனக்கு உதவ வேண்டும்' என்று பணிவுடன் கேட்டுக் கொண்டான்.

ராமைய்யனும் 'சரி முதலில் என் மாமனார் பரந்தாமனைப் பற்றிக் கவிதை ஒன்றைக் கூறு பார்க்கலாம்' என்றான். சிவகுரு பரந்தாமனைப் பற்றி விவரமாக அறிந்து கொண்டதால் ராமைய்யன் கேட்ட படி ஒரு கவிதையை அவரைப் புகழ்ந்து புனைந்து கூறினான். ராமைய்யனும் 'சபாஷ்! ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பது போல இந்த ஒரு கவிதையே உன் திறமையைக் காட்டி விட்டது. இந்த ஊரில் கலைகளைப் பெரிதும் ரசிப்பவர் கல்யாணராமன் என்பவர். அவர் எப்போதும் தன்னுடன் ஒரு நல்ல கவிஞனை வைத்துக் கொள்ள விரும்புவதால் அவருக்கு சிபாரிசுக் கடிதம் கொடுக்கிறேன் அங்கு போய் அவரைப்பார். கண்டிப்பாக உன்னை அவர் ஏற்றுக்கொள்வார் எனக்கூறி சிபாரிசு கடிதம் எழுதிக் கொடுத்து சிவகுருவை அனுப்பி வைத்தான்.

இதற்குப் பின் சிவகுரு சுப்பைய்யனின் வீட்டிற்குச் சென்றான். அவன் ராமைய்யனைப் புகழ்ந்தது போலவே சுப்பைய்யனையும் புகழ்ந்தான். அதனால் உள்ளம் பூரித்த சுப்பைய்யன் 'என்னிடம் என் தகப்பனார் வெங்கடாசலத்தைப் பற்றி ராமைய்யன் எழுதிய பாட்டு ஒன்று உள்ளது. அதற்கு நல்ல விதமாய்





இசை அமைத்துப்பாடிக் காட்டு' எனக் கூறினான். சிவகுருவும் சுப்பையயன் கொடுத்த பாட்டிற்கு இசை அமைத்துத் தன் இனிய குரலில் பாடினான். அதை சுப்பையயன் மெய்மறந்து கேட்டான். பாட்டு முடிந்த பின் தன் நினைவுக்கு வந்த அவன் சிவகுருவைப் பார்த்து 'பேஷ் பேஷ்! நான் எதிர்பார்த்ததைவிட நீ நன்றாகப் பாடினாயே. இந்த நகரில் கலாரசிகரான கல்யாணராமன் என்னும் தனவான் இருக்கிறார். என் வார்த்தைக்கு மதிப்புக் கொடுப்பவர். தன்னோடு எப்போதும் நல்ல பாடகன் இருக்க வேண்டுமென அவர் விரும்புகிறார். நான் உனக்காக ஒரு சிபாரிசுக் கடிதம் எழுதிக் கொடுக்கிறேன் எனக்கூறி சிபாரிசுக் கடிதம் எழுதி அவனிடம் கொடுத்து அனுப்பினான்.

சிவகுருவும் கல்யாணராமனைக் கண்டு இரு சிபாரிசுக் கடிதங் களையும் அவரிடம் கொடுத்தான்.

சிவகுரு தன் கவிதைகளாலும் இசையாலும் கல்யாணராமன் மனதைக் கவர்ந்து விட்டான். கல்யாணராமனும் அவனைத் தன்னிடம் வேலைக்கு அமர்த்திக் கொண்டார். தனக்கு நகரில் நிலையாக இருக்க வழி செய்து கொடுத்தவர்களுக்கு ஒரு விருந்து அளிப்பது என்று சிவகுரு தீர்மானித் தான். அதனால் முதலில் அவன் ராமைய்யனைக் கண்டு தன் விருப்பத்தைச் சொன்னான்.

ராமைய்யனும் ஒரு காகிதத்தில் தன் மாமனார் பரந்தாமனின் பெய



ரையும் மைத்துனன் கணபதியின் பெயரையும் எழுதி சிவகுருவிடம் கொடுத்தான். பிறகு அவன் 'நீயே போய் அவர்களையும் விருந்திற்கு வரவேண்டுமென்று நேரில் அழை' என்று கூறி அவர்களது முகவரி களையும் எழுதிக் கொடுத்தான்.

அப்போது சிவகுரு 'நான் உங்கள் உறவில் மொத்தம் ஐந்து குடும்பத் தவரை அழைக்க விரும்புகிறேன். இப்போது உங்களது, உங்கள் மாமனாரது, உங்கள் மைத்துனரது என்று மூன்று குடும்பங்களே ஆயின. மேலும் இரண்டு குடும்பத்தவர் பெயர்களையும் முகவரியையும் கூறினால் அவர்களையும் கண்டு நேரில் அழைப்பு விடுப்பேன்' என்றான். ராமையயனும் சற்றுத் தயங்கியவாறே 'சரி என் தந்தை வெங்கடாசலத்தையும் என் தம்பி சுப்பைய்யனையும் அழை' என்று கூறி அவர்களது முகவரியையும் எழுதிக் கொடுத்தான்.

அதைப்படித்த சிவகுரு 'ஓ! வெங்கடாசலம் இவரது தந்தையா! சுப்பைய்யன் இவரது தம்பியா' என எண்ணி ஆச்சரியப்பட்டான். அப்போது வெங்கடாசலத்தின் எச்சரிக்கை நினைவிற்கு வரவே அவன் அவ்விருவரையும் அறிந்தவன் போலக் காட்டிக் கொள்ளவில்லை.

இதற்குப் பிறகு அவன் சுப்பைய்யன் வீட்டிற்குப் போய் ராமைய்யனிடம் கூறியது போலவே சொல்லி தான் அளிக்கும் விருந்திற்கு அவனும் அவனது உறவினர்களும் வரவேண்டுமெனக் கூறி அவனது உறவினர்களின் முகவரிகளை எழுதிக் கொடுத்தால் அவர்களைத் தானே போய் நேரில் அழைப்பதாகக் கூறினான். சுப்பைய்யனும் ஒரு காகிதத்தை எடுத்து முதலில் தன் தந்தையின் பெயரையும் அடுத்து தன் அண்ணன் ராமைய்யன் பெயரையும் எழுதிக் கொடுத்தான்.

அப்போது சிவகுரு ' இவர்களது முகவரிகளையும் எழுதுங்கள் மேலும் இரு உறவினர்களின் பெயர் களையும் அவர்களது முகவரி களையும் எழுதிக் கொடுங்கள்.

அவர்களையும் விருந்திற்கு அழைக்கிறேன்' என்றான். சுப்பைய்யனும் ஒரு நிமிடம் யோசித்துவிட்டு 'என் மாமனார் பரந்தாமனின் பெயரையும் என் மைத்துனன் கணபதியின் பெயரையும் எழுதி அவர்களது முகவரிகளையும் குறித்துக் கொடுக்கிறேன்' எனக் கூறி காகிதத்தில் அவற்றையும் எழுதினான்.



அப்போது சிவகுரு 'இதென்ன வேடிக்கை ராமைய்யனும் சுப்பைய்யனும் பரந்தாமனின் மாப்பிள்ளைகள். அவர்களிருவரும் வெங்கடாசலத்தின் புதல்வர்கள். அப்படி இருந்தும் வெங்கடாசலம் இருவரும் தம் மகன்களே என்று கூறாமல் ராமைய்யனைப் பரந்தாமனின் மாப்பிள்ளை என்றும் சுப்பைய்யனை தன் இரண்டாவது மகன் என்றும் ஏன் கூறினார்?' என்று யோசித்தான். அவனுக்கு எதுவும் தோன்றாததால் அதற்கான விடையை வெல்வத்தூருக்குப் போய் வெங்கடாசலத்திடமே கேட்டுத் தெரிந்து கொள்வது என்று தீர்மானித்துக் கொண்டான்.

அவன் வெல்வத்தூருக்குப் போய் வெங்கடாசலத்தைக் கண்டான். அவரை வணங்கி நடந்ததை எல்லாம் சொன்னான். ''நான் முதலில் தங்களைப் பார்த்த போது ராமைய்யனைப் பரந்தாமனின் மாப்பிள்ளை என்றும் சுப்பையய்யனை உங்கள் மகனென்றும் கூறினீர்கள். ஆனால் இருவரும் உங்கள் மகன்கள்தானே?! அப்படியிருக்க ராமைய்யனை மட்டும் பரந்தாமனின் மாப்பிள்ளை என்று ஏன் கூறினீர்களென்று எனக்குப் புரியவில்லை' என்று கேட்டான்.

அது கேட்டு வெங்கடாசலம் சிரித்தவாறே ''எனக்கு என் இரு மகன்களும் சமமானவர்கள் தான். அதே சமயம் ஒரு முக்கியமான விஷயத்தையும் இங்கே சொல்ல விரும்புகிறேன். தந்தையைப் பின்பற்றி நடப்பவர்களே மக்கள். மாமனாரை அனுசரித்து நடப்ப

வர்கள் மாப்பிள்ளைகள். ராமைய்யன் முதலில் என் மகனாக இருந்து கல்யாணமான பிறகு மாமனாரின் பின்னால் செல்ல ஆரம்பித்து விட்டான். அது முதல் ராமைய்யன் முதலில் தன் மாமனாரையும் அவரது வீட்டையும் பற்றித் தான் எண்ணலானான். தன் தந்தையும் அவரது வீடும் அவனுக்கு இரண்டாவது தான்; எனவே தான் அவனைப் பரந்தாமனின் மாப்பிள்ளை என்று உன்னிடம் கூறினேன். மனிதன் யாரைப் பின்பற்றுகிறானோ அவனது சீடன் என்றோ தொண்டன் என்றோ கூறப்படுகிறான். இதிலிருந்து நீயும் ஒரு விஷயம் தெரிந்து கொள்ள வேண்டும். நீ கவிஞன். காளிதாசர் போன்ற மாபெரும் கவிஞன் போன்ற ஒருவனைப்பின் பற்ற வேண்டும். நீ கல்யாணராமனிடம் வேலை செய்து கொண்டே இருந்தால் அவரது வேலையாள் என்று அழைக்கப்படுவாய். கவிஞன் என்றோ சங்கீத வித்வான் என்றோ பெயர் பெறவே மாட்டாய். எனவே ஏதாவது ஒரு துறையைத் தேர்ந்தெடுத்து அதில் சிறந்து விளங்கிய ஒரு மகானைப் பின் பற்றினால் உன்னை அவரது சீடன் என்று எல்லோரும் போற்றுவார்கள்' என்றார்.

சிவகுருவும் 'உங்களைப் போன்ற வர்கள் என்னைப் போன்றவர்களுக்கு அறிவுரை கூறிவருவதால் நாங்க ளெல்லாம் முன்னேற முடிகிறது. நீங்கள் கூறியபடியே நடக்கிறேன்' எனக் கூறி அவரிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான்.



ஸ்ரீ கிருஷ்ணர் தூது

# மகாபாரதம்

கிருஷ்ணர் வருகிறார் என்ற தகவல் ஹஸ்தினா புரத்திற்கு எட்டியது. உடனே திருதராஷ்டிரன், பீஷ்மர், துரோணர், சஞ்சயன், விதுரர் முதலிய பிரமுகர்களையும் துரியோதனனையும் அவனது அமைச்சர்களையும் அழைத்து 'கிருஷ்ணர் இங்கு வந்து கொண்டிருக்கிறாராம். அவர் வரும் வழியில் அவரை எல்லா இடங்களிலும் உபசரிக்க ஏற்பாடு செய்யுங்கள்' எனக் கூறினான்.

துரியோதனன் ஹஸ்தினாபுர எல்லையிலிருந்து விருகஸ்தலம் வரை வளைவுகளை அமைத்துத் தோரணங்களைக் கட்டி கிருஷ்ணரை ஆங்காங்கே நன்கு உபசரிக்கவும் ஏற்பாடுகளைச் செய்தான். கிருஷ்ணரோ வழிநெடுக அவற்றைப் பார்த்தும் பார்க்காதது போல நேரே ஹஸ்தினாபுரத்திற்கு வந்து சேர்ந்தார். அவரை நகர எல்லையில் பீஷ்மர், துரோணர் முதலானோர் வரவேற்றனர்.

கிருஷ்ணர் திருதராஷ்டிரனின் அரண்மனை முன் தன் ரதத்தை நிறுத்தி விட்டுக் கீழே இறங்கினார். அங்கிருந்து நடந்தே உள்ளே போய் திருதராஷ்டிரனிருக்கும் தர்பாரை அடைந்தார். அவரைக் கண்டதும் சபையிலிருந்த அனைவரும் எழுந்து நின்று வணங்கி மரியாதை செலுத்தினார்கள். திருதராஷ்டிரனும் எழுந்து நிற்கவே கிருஷ்ணர் அவனருகே சென்று நலம் விசாரித்தார். அதன்பின் பீஷ்மர், துரோணர், மற்றும் கூடியிருந்த அரசர்கள் எல்லோரையும் தனித் தனியே அணுகி நலம் விசாரித்தார்.





பின்னர் அவர் தாம் அமர வைக்கப் பட்ட தங்க ஆசனத்தில் அமர்ந்து சற்று நேரம் அளவளாவிவிட்டு விதுரரின் இல்லத்திற்குச் சென்றார்.

அன்று மதியவேளையின் போது குந்திதேவியைக் காண அவளது உறைவிடத்திற்குச் சென்றார். பிறகு துரியோதனனைக் காண அங்கிருந்து சென்றார்.

துரியோதனனின் மாளிகை இந்திரலோகம் போல இருந்தது. துரியோதனன் கிருஷ்ணரிடம் 'இனி நீங்கள் என் விருந்தாளியாக இருக்க வேண்டும். நான் அளிக்கும் விருந்து, உபசாரங்கள் ஆகிய வற்றை ஏற்க வேண்டும்' எனக் கூறினான். கிருஷ்ணரோ 'துரியோதனா! உன் விருந்தையும் உபசாரங்களையும் இப்போது ஏற்பதற்கு இல்லை. இப்போது நான் சமாதானம் பேச தூதனாக வந்திருக்கிறேன். பாண்டவர்களு க்கும் உனக்குமிடையே சமாதானம் செய்து வைக்க வந்த நான் உன் வீட்டில் தங்கி விருந்துண்பது முறையல்ல. இந்த சமாதானப் பேச்சு வெற்றி பெற்றால் உன் வீட்டில் விருந்து சாப்பிட எனக்கு எந்தவித ஆட்சேபணையும் இல்லை' என்று கூறிவிட்டு அங்கிருந்து போய் பீஷ்மரையும் துரோணரையும் கண்டு பேசினார். அதன் பிறகு அவர் விதுரரின் வீட்டிற்குச் சென்றார்.

அவர் விதுரரின் வீட்டில் உணவருந்தினார். சாப்பாடு முடிந் ததும் விதுரர் கிருஷ்ணரிடம் 'கிருஷ்ணா! நீங்கள் ஹஸ்தினா புரத்திற்கு இப்போது வந்தது அவ்வளவு சரியில்லை என்று நினைக்கிறேன். துரியோதனன் எந்தப் பாவத்திற்கும் அஞ்சாதவன். அவன் போருக்காகவே துடித்துக் கொண்டிருக்கிறான். சமாதானமாக போக அவன் விரும்பவில்லை என்றார்.

கிருஷ்ணரும் 'விதுரரே! போரால் இருதரப்பினருக்கும் பொருட் சேதமும் உயிர்ச் சேதமும் தானே ஏற்படும்? இதைத் தடுக்கவே நான்



முயல்கிறேன். நாளைக்கு யாரும் கிருஷ்ணர் இருந்தும் கூட போரைத் தடுக்க முயற்சி செய்யாமல் இருந்து விட்டாரே என்று குறை கூற இடம் கொடுக்கலாகாது. எனக்கு என்ன நேர்ந்து விடுமோ என்று நீங்கள் பயப்படவே வேண்டாம்' எனக் கூறினார். அதன்பின் விதுரரின் வீட்டிலேயே அவர் அன்றைய இரவுப் பொழுதைக் கழித்தார்.

மறுநாள் காலையில் துரியோதனனும் சகுனியும் அங்கு வந்து 'திருதராஷ்டிர மன்னர் அரசபையில் தங்கள் வருகையை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறார்' என்று தெரிவித்தார்கள். அப்போது கிருஷ்ணரின் தேரோட்டியான தாருகன் அங்கு வந்து ரதம் புறப்படுவதற்குத் தயாராக இருப்பதாகத் தெரிவிக்கவே கிருஷ்ணரும் தான் அரசசபைக்குத் தான் கிளம்பிக் கொண்டிருப்பதாக துரியோதனனிடம் கூறிவிட்டுத் தன் ரதத்திற்குப் போய் அதில் அமர்ந்து கொண்டார். அவரது ரதம் கிளம்பவே அதன் பின்னால் துரியோதனனும் சகுனியும் தம் ரதங்களில் சென்றனர்.

கிருஷ்ணர் திருதராஷ்டிரன் கூட்டிய அரச சபைக்குச் சென்ற போது பல அரசர்களும் அதே சபையில் கலந்து கொள்ளச் சென்று கொண்டிருந்தார்கள். இப்படிக் கூட்டம் கூட்டமாக வீரர்களோடு மன்னர்கள் செல்வதை மக்கள் வேடிக்கை பார்த்தார்கள். ஆனால் கிருஷ்ணரின் ரதம் அவர்களைக் கடந்து சென்றபோது மக்கள் மரியாதையுடன் ஒதுங்கி வழிவிட்டு வணங்கினார்கள்.

கிருஷ்ணரின் ரதம் திருதராஷ்டிரனின் அரண்மனை வாசலில் போய் நின்றது கிருஷ்ணரோடு விதுரர் இறங்க தாருகன் ஒரு புறமாயும் விதுரர் ஒருபுறமாயும் நடுவில் கிருஷ்ணருமாக அரச சபைக்குச் சென்றார்கள். அவருக்கு பின் துரியோதனன், கர்ணன், கிருதவர்மன் ஆகியோர் சென்றனர். கிருஷ்ணருக்கு அங்கு உரிய மரியாதைகள் கிடைத்தன.

அவருக்காக தனியாக ஒரு ஆசனம் போடப்பட்டிருந்தது. அவர் அதில் அமர்ந்து கொண்டார். அவருக்குப் பக்கத்தில் கர்ணனும் துரியோ தனனும் அமர்ந்தனர். விதுரரும் கிருஷ்ணர் அருகேதான் உட்கார்ந்து கொண்டார்.

சபையில் அமைதி நிலவியது. அப்போது கிருஷ்ணர் திருதராஷ் டிரனை நோக்கிக் கூறலானார்! ''அரசே! நான் இங்கு வந்ததற்குக் காரணம் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும்மிடையே போர் நடக்காமலிருக்க சமாதானப் பேச்சு வார்த்தைகளை நடத்தத்தான். போரினால் இருதரப்பிலும் கடும் உயிர்ச்சேதம் ஏற்படும். இந்தப் பரிதாப நிலை ஏற்படாமல் தடுக்குமாறு உங்களை மிகவும் வேண்டுகிறேன். அரசர்களுக்கு நாயகமாக விளங்குபவர்கள் குருவம்சத்தில் தோன்றி வரும் மன்னர்களே. கௌரவர்களுக்கு வழிகாட்ட வேண்டியது அந்த வம்சத்தில் பிறந்து முதியவராக இருக்கும் நீங்கள்தாம். எனவே யார் எந்தத் தவறைச் செய்தாலும் அவருக்கு தண்டனை அளிப்பதும் உங்கள் கடமை. துரியோதனனும் அவனது சகோதரர்களும் எவ்வ ளவோ குற்றங்களைச் செய்திருக் கிறார்கள். செய்து கொண்டும் இருக்கிறார்கள். இதை நீங்கள்



உணர வேண்டும். இனி வரப் போகும் ஆபத்திற்குக் காரணமாக இருப்பவர்கள் உங்கள் புதல்வர் களே. இந்த ஆபத்தைத் தடுத்து நிறுத்தாவிட்டால் உலகமே அழிந்து விடும். இதை நேர விடாமல் தடுக்கக்கூடிய சக்தி உங்களிடம் தான் உள்ளது. பாண்ட வர்களுக்கும் கௌரவர்களுக்குமிடையே சமாதானம் செய்து வைக்க முடியுமென்றே நான் நம்புகிறேன். நாம் இருவரும் முயன்றால் அது கைகூடும். நீங்கள் உங்கள் புதல்வர் களுக்கு நற்புத்தி புகடுங்கள். நான் பாண்டவர்களின் கோபத்தைத் தணிக்கிறேன். இதை உங்களாலும் செய்ய முடியும். என்னாலும்



மென்று நீங்கள் நினைத்தால் அதற்கும் அவர்கள் தயார். போர் அல்லது சமாதானமா என்பதை நீங்கள் இப்போது முடிவு செய்யுங்கள்''.

கிருஷ்ணர் இவ்வாறு கூறி முடித்தபின் அந்த அவையில் அமைதி நிலவி இருந்தது. அதைக் கலைத்தவாறே பரசுராமர் திருதராஷ்டிரனிடம் 'திருதராஷ்டிரா, இப்போது நான் சொல்வதை கவனமாகக் கேட்டு விட்டு ஒரு சரியான முடிவிற்குவா' என்று கூறி இவ்வாறு சொல்லத் தொடங்கினார்.

'தம்போத்பவன் என்ற மன்னன் தினமும் பிராம்மண, க்ஷத்திரிய, வைசியவருணத்தவரை அழைத்து 'உங்களில் யாராவது என்னை வெல்ல முடியுமா? என்று கேட்டு வந்தான். அதைக் கேட்டுக் கேட்டு சலித்துப் போன அவர்கள் அவனிடம் 'அரசே! நரர் என்றும் நாராயணர் என்றும் இருரிஷிகள் இருக்கிறார்கள். அவர்களை யாராலும் வெல்ல முடியாதாம். அவர்கள் கந்தமாதனப் பர்வதத்தில் தவம் செய்து கொண்டிருக் கிறார்கள். அவர்களோடு உங்களால் சண்டை போட முடியுமா? எனக் கேட்டார்கள்.

தம்போத்பவன் தன் படையுடன்

முடியும். போர் என்று மூண்டு விட்டால் பாண்டவர்களால் வெற்றி பெறமுடியாது என்று எண்ணிவிட வேண்டாம். அவர்கள் உங்களுக்கு உறுதுணையாக நின்றால் இவ்வுலகில் உங்களை யாராலும் வெல்ல முடியாது. பாண்டவர் களுடன் சமாதானமாகப் போவது உங்களுக்குத்தான் நன்மை. இச்சபைக்கு சரியான நீதி வழங்கும் பொறுப்பு உள்ளது. எனவே பாண்டவர்களுக்குச் சேரவேண்டிய நாட்டை அவர்களுக்குக் கொடுத்து விடுங்கள். அது முடியாது போரிட் டுத்தான் அவர்கள் தம் நாட்டைப் பெற்றுக் கொள்ள வேண்டு

நர நாராயணர்கள் தவம் புரிந்து கொண்டிருக்கும் இடத்திற்குச் சென்று தன்னோடு போர் புரியும்படி சவால் விட்டான். அவர்களோ தாம் தவம் புரியும் ரிஷிகள் என்றும் தாம் அவனுடன் போர்புரிவது முறையல்ல என்றும் சொல்லிப் பார்த்தார்கள். ஆனால் அவன் கேட்காமல் சண்டையே வேண்டுமென வற்புறுத்தினான். இதனால் கோபம் கொண்டு நரர் என்ற ரிஷி தர்ப்பைப் புல்லை எடுத்து ஒரு மந்திரத்தைக் கூறி அம்மன்னனின் படை மீது எறிந்தார். மறுவினாடியில் அந்தப் படை முழுவதும் அழிந்து விட்டது. இதைக்கண்ட தம்போத்பவன் நரரின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கோரினான். அவரும் அவனை மன்னித்து 'இனியாவது அகந்தையை விட்டொழித்து மக்களுக்கு நன்மைகள் புரிந்து ஆண்டு வா' என்று சொல்லி அவனை அனுப்பினார்.

பரசுராமர் இதைக் கூறி 'மன்னனே நரர் ஒருவரால் மட்டும் இவ்வளவு செய்ய முடிந்த தென்றால் அவரைவிட சக்தி வாய்ந்த நாராயணரால் எவ்வளவு செய்ய முடியுமென்று யோசித்துப் பார். அந்த நரநாராயணர்களே இப்போது அர்ஜுனனாகவும் கிருஷ்ணராகவும் இருக்கிறார்கள். அர்ஜுனன் தன் வில்லில் அம்பை வைக்கும் முன் நீ உன் கர்வத்தை விட்டொழித்து பாண்டவர்களுடன் சமாதானம் செய்து கொள். போரில் அர்ஜுனனும் கிருஷ்ணரும் ஒருபக்கமாக இருக்கும்போது அவர்களை யாராலும் வெல்ல முடியாது. இதை நினைத்துப் பார்த்து பாண்டவர்களுடன் சமாதானம் செய்து கொள்' என்றார்.



# ஒப்பிலா அழகு

ராணியின் அந்தப்புரத்தில் வேலை செய்யும் மங்கம்மா என்பவள் ஒரு நாள் ராணியின் அறையைப் பெருக்கிக் கொண்டிருக்கும் போது சில முத்துக்களும் ரத்தினக் கற்களும் தரையில் சிதறிக் கிடப்பதைக் கண்டு அவற்றை எடுத்து ராணியிடம் கொடுத்தாள். ராணியும் அவளது நாணயத்தைப் பாராட்டி இவை அனைத்தையும் மங்கம்மாவுக்கு பரிசளித்தாள்.

மங்கம்மாவின் பதினாறு வயதான மகன் கோவிந்தன் தன் வீட்டில் ஒரு சிறு பெட்டியிலிருந்த முத்துக்களையும் ரத்தினக் கற்களையும் பார்த்துவிட்டு ''இவைதான் எவ்வளவு அழகாக உள்ளன!'' எனக் கூறினான். அப்போது அவனது தாயார் ''இது போன்ற பல முத்துகளும் நவரத்தினங்களும் பதிக்கப் பட்ட ஆபரணங்களை அணிந்து கொண்டிருக்கும் நம் ராணியார் எவ்வளவு அழகானவராகத் தென்படுகிறார் தெரியுமா'' என்று கூறினாள்.

மறுநாள் காலையில் கோவிந்தன் காணாமல் போனான். பல வருடங்கள் கழிந்தன. தன் மகனைக் காணவில்லையே என்று இன்னமும் ஏங்கிக் கொண்டிருந்த மங்கம்மாவிடம் கோவிந்தன் எழுதிய கடிதத்தை யாரோ ஒருவர் கொண்டு வந்து கொடுத்தார்கள். அதில் அம்மா! உன்னிடம் சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டு வெளியேறியதற்கு என்னை மன்னித்து விடு. முத்துக்களும் ரத்தினங்களும் பதிக்கப்பட்ட நகைகள் அழகாக இருந்தாலும் அவற்றை அணியும் ராணி இன்னமும் அழகானவள் என்று நீ சொல்லக்கேட்டதும் என் குருநாதர் சொன்னதே என் நினைவிற்கு வருகிறது. சூரியனும் சந்திரனும் நட்சத்திரங்களும் கடவுளின் ஆபரணங்களே என்பார் குருநாதர். அப்படியானால் அவற்றை தினமும் அணியும் அந்த கடவுளின் அழகு எவ்வளவு அழகானது என எண்ணி வியந்து அந்த ஒப்பிலாத சக்தியைத் தேடித்தான் நான் சென்று கொண்டிருக்கிறேன்'' என கோவிந்தன் எழுதியிருந்தான்.





# வாக்கு தவறாதவன்

காந்தார நாட்டின் மன்னன் தானவர்மன் ஒருமுறை தன் பரிவாரங்களுடன் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். அங்கே ஒரு மரத்தின் கீழ் மிக அழகான ஒரு கந்தர்வப் பெண்ணைப் பார்த்தான். அவளை மணம் முடிக்க ஆசைப் பட்டான்.

அந்த கந்தர்வப் பெண் அதற்குச் சம்மதிக்கவில்லை. மன்னனோ மீண்டும் தன்னை அவள் மணந்து கொள்ளத்தான் வேண்டுமென்று வற்புறுத்தினான்.

இதனால் கோபம் கொண்ட அவள் 'உன் கண்கள் என்னைக் கண்டதும் உன் அறிவை மழுங்க வைத்து விட்டன. நான் கந்தர்வப் பெண் என்று கூறியும் நீ பிடிவாதம் பிடிக்கிறாய். எனவே நீ உன் பார்வையை இழந்து குருடனாக இரு' என்று சாபம் கொடுத்துவிட்டு ஆகாய வழியே சென்றுவிட்டாள்.

குருடனாகிவிட்ட தானவர்மனை அவனது வீரர்கள் அரண்மனைக்குக் கொண்டு சேர்த்தார்கள். வைத்தியர்கள் அவனுக்குப் பலவித சிகிச்சைகள் அளித்துப்பார்த்தும் அவனுக்குப் பார்வைகிட்டவில்லை. சாபத்தினால் ஏற்பட்ட அந்தக்குறை அச்சாபத்திற்கு முறிவு கண்டாலே போகும் என்று பண்டிதர்கள் கூறவே கந்தர்வ லோகத்திற்கு யார்போய் அந்த கந்தர்வப் பெண்ணைத் தேடிக் கண்டு பிடித்து சாபத்தை எப்படி போக்குவது என அறிந்து வருவது என்பது பெரும் பிரச்சினையாக ஆயிற்று.

தானவர்மனின் ஒரே மகன் சுந்தரவர்மன். அவன் தன் தந்தைக்குப் பார்வை கிடைக்க கந்தர்வலோகத்திற்குப் போய் சாபத்தைப்போக்க வழி கண்டு வருவதாகக் கூறிவிட்டு அரண்மனையிலிருந்து புறப்பட்டான். அவன் வெகு நாட்கள் நடந்து ஒரு மலைப்பகுதியை அடைந்தான். அங்கு மனித நடமாட்டமே இல்லை. அவனுக்கோ ஒரே பசி. களைத்துப் போய் அவன் ஒரு மரத்தடியே படுத்து விட்டான்.



களைப்பால் தூங்கிவிட்ட அவன் கண்விழித்துப் பார்த்தபோது விகாரமாக உள்ள பெண் ஒருத்தி தன்னருகே உட்கார்ந்து ஒரு பழத்தை தன் வாய்க்குள் போட முயல்வதைக் கண்டான். அவன் ஆச்சரியத்துடன் பார்க்கவே அவளும் 'நான் இந்த மரத்தில் வாழும் பிசாசு. நீ என் இருப்பிடத் திற்கு வந்தாய் அதனால் நீ என் விருந்தாளி. இந்தப் பக்கமாக யாருமே வர மாட்டார்களே. நீ ஏன் இவ்வழியே வந்தாய்?' என்று கேட்டாள்.

சுந்தரவர்மனும் தான் வந்த வேலைபற்றிக் கூறி 'எனக்கு உணவளித்த நீ இன்னொரு உதவியையும் செய். கந்தர்வலோகத்திற்குப்போக எனக்கு வழியைச் சொல்' என்றான்.

அவளும் 'கந்தர்வலோகத்திற்கு ஆகாய வழியாகத்தான் போக முடியும். என்னால் உன்னை அந்த லோகத்தின் வாசல்வரை கொண்டு போய்விட முடியும்.

'உன்னை நான் அங்கு கொண்டுபோய் விட ஒரு நிபந்தனை. நீ என் ஒரு விருப்பத்தை மட்டும் நிறைவேற்றுவதாக வாக்களிக்க வேண்டும்' என்றாள். அவனும் சம்மதித்தான். அவள் அவனைத் தூக்கிக் கொண்டு ஆகாய வழியே போய் கந்தர்வலோகத்தின் வாசலில் இறக்கிவிட்டு 'இப்போது கண்களைத் திற' என்றாள்.

சுந்தரவர்மனும் கண்ணைத் திறந்து பார்த்தபோது தான் கந்தர்வ லோகத்தின் வாசலில் நிற்பது கண்டுபெரும் மகிழ்ச்சி அடைந்தான். அவனைச் சுமந்துவந்த பெண் பிசாசும் ' நீ போய் உன் வேலையை முடித்துக்கொண்டுவா. நீ வரும் வரை நான் இங்கேயே காத்திருக்கிறேன்' எனக்கூறி அவனை உள்ளே அனுப்பியது.

சுந்தரவர்மன் கந்தர்வலோகத்தில் போனதும் அவனைப் பல கந்தர்வப் பெண்கள் சூழ்ந்துகொண்டு 'நீ மிக அழகாக இருக்கிறாயே. உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டனர். அவனும் 'இங்கிருக்கும் ஒரு கந்தர்வப் பெண் சில நாட்களுக்கு முன் பூவுலகில் காந்தார நாட்டிற்கு வந்து என் தந்தையை குருடனாகப் போகும் படி சபித்து விட்டு வந்துவிட்டாள். அவளது பெயர்

எனக்குத் தெரியாது. அவளைக் கண்டு பிடித்துப் பேசிப் போகவே இங்கு வந்தேன்' என்றான்.

அந்த கந்தர்வப் பெண்கள் அண்மையில் காந்தார நாட்டிற்குப் போய் வந்தவள் தம் இளவரசியே என அறிந்திருந்தனர். அதனால் அவர்கள் சுந்தரவர்மனைத் தம் இளவரசியிடம் அழைத்துச் சென்றார்கள்.

சுந்தரவர்மன் இளவரசியிடம் 'அம்மணீ! என் தந்தை உங்களை அவமதிக்க நினைக்கவில்லை உங்களைத்தன் பட்டத்து ராணியாக்கி கௌரவிக்கத் தான் விரும்பினார்' என்று பணிவுடன் கூறி 'அவருக்கு மீண்டும் பார்வை கிடைக்க சாபவிமோசனம் கூறுங்கள்' என்று உருக்கமாக வேண்டினான்.

அந்த இளவரசியும் 'சரி இதோ இந்த மலரைக் கொண்டுபோய் உன் தந்தையின் கண்களின் மீது தேய். அவருக்குப் பார்வை கிடைத்து விடும்' 'இன்னொரு விஷயம். இந்த மலரை உன் தந்தை யின் கண்களின் மீது தேய்ப்பவர் வாக்குத் தவறாதவராக இருக்க வேண்டும். இதை நினைவில் வைத்துக் கொள். இதில் தவறு நடந்தால் உன் தந்தைக்குக் கிடைத்த பார்வை மீண்டும் போய்விடும்' என எச்சரித்து அவனை அனுப்பினாள்.

சுந்தரவர்மன் அவள் கொடுத்த மலருடன் கந்தர்வலோக வாசலுக்கு வந்து பிசாசுப் பெண்ணை சந்தித்



தான். அவளும் அவனைச் சுமந்து கொண்டு ஒரே வினாடியில் காந்தார மன்னனின் அரண்மனை வாசலில் போய் நின்றாள். அப்போது அவள் சுந்தரவர்மனிடம் 'நான் உனக்கு உதவி செய்து விட்டேன். இனி நீ என்விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும். நீ என்னை மணக்க வேண்டும் என்பதே என் விருப்பம்' என்றாள்.

சுந்தரவர்மனும் 'அப்படியே செய்கிறேன். நான் உள்ளே போய் விட்டு வருகிறேன். அதுவரை நீ இங்கேயே இரு' எனக் கூறிவிட்டு உள்ளே சென்றான். அவன் தன் தந்தையின் கண்களின் மீது தான் கொண்டுவந்த மலரைத் தேய்த்தான்.

மறு நிமிடமே தானவர்மனுக்குப் பார்வை கிடைத்துவிட்டது.

அப்போது சுந்தரவர்மன் தன் தந்தை யிடமும் அமைச்சரிடமும் தனக்கு உதவிசெய்த பிசாசுப் பெண்ணைப் பற்றிக்கூறி அவளுக்குக் கொடுத்த வாக்கின்படி அவளை மணந்து கொள்ளப் போவதாகக் கூறினான்.

மன்னனும் மற்றவர்களும் அவன் பிசாசுப் பெண்ணை மணப்பதைக் கடுமையாக எதிர்த்தார்கள்.

சுந்தரவர்மனோ 'நான் கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டும் அது என் கடமை. இதிலிருந்து தவறினால் கந்தர்வ இளவரசியின் எச்சரிக்கைப் படி என் தந்தைக்கு கிடைத்த பார்வை போய்விடும். அப்படிப் போக விடாமல் செய்வது என் கடமை' எனக் கூறிவிட்டு நேராக பிசாசுப்பெண்ணிடம் 'உன்னை நான் மணக்கத் தயார்' என்று கூறி அவளது கையைப் பற்றினான்.

மறு வினாடியே அந்தப் பிசாசுப் பெண் ஒரு அழகிய அரசகுமாரியாக மாறிவிட்டாள்.

அவள் சிரித்தவாறே 'நான் பாஞ்சால நாட்டு அரசகுமாரி பிரபா. ஒரு முனிவரின் கோபத்துக்கு ஆளானதால் பிசாசு உருவம் பெற்றேன்.

ஆனாலும் என்னை யாராவது மணப்பதாகக் கூறி கரம் பற்றினால் எனக்குப் பழைய உருவம் கிடைக்கும் எனச் சாபவிமோசனம் அளித்தார் முனிவர். அதன்படி இவ்வளவு நாட்களாகப் பிசாசாகத் திரிந்த நான் இப்போது பழையபடி அரசகுமாரியாக ஆகிவிட்டேன்' என்றாள்.

தந்தையின் சம்மதத்துடன் சுந்தரவர்மனுக்கும் பிரபாவிற்கும் திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது.





# பாரத நாடு



மகாபாரத இந்திரப் பிரஸ்தம் - ஒரு ஓவியரின் கற்பனை

# டில்லி நகரம்

இன்று உலகிலேயே மிகப் பெரிய ஜனநாயக நாடாக விளங்கும் நம் பாரத தேசத்தின் தலைநகர் தில்லி (டில்லி). இப்பகுதியில் தான் முன் காலத்து இந்திரப் பிரஸ்தம் இருந்தது. பாண்டவர்களின் தலை நகரான இந்திரப் பிரஸ்தத்தை நிர்மாணித்தவன் விசுவகர்மா. இதில் மயன் அற்புத மாயாஜாலமயசபையை அமைத்துக் கொடுத்தான். இது மகாபாரதம் கூறுவது.

யமுனை நதியின் நீரோட்டப் பாதை அடிக்கடி மாறிக் கொண்டே இருந்ததால் ஒரு வேளை இந்திரப் பிரஸ்தம் அதன் வெள்ளப் பெருக்கில் அழிந்து போயிருக்கலாம். அதே பகுதியில் மேலும் ஐந்து முறை நகரம் மீண்டும் நிர்மாணிக்கப்பட்டதாயும் தற்போதுள்ள தில்லி நகரம் ஏழாவது முறையில் நிர்மாணிக்கப்பட்டது என்றும் கூறப்படுகிறது.

வரலாற்றுப்படி பார்த்தால் எட்டாவது நூற்றாண்டில் அனங்க பாலன் என்ற ரஜபுத்திர மன்னன் இப்பகுதியில் நகரை நிர்மாணித்தான். அவன் கட்டிய கோட்டையின் பெயர் லால் கோட். அதன் பின் சௌஹான் வம்சத்தவர் தில்லியை ஆண்டு வந்தார்கள். மாவீரனும் பராக்கிரமசாலியுமான பிருத்விராஜன் அவர்களில் புகழ் பெற்றவன். அவன் கன்னௌஜ் மன்னன் ஜெயசந்திரனின் மகள் சம்யுக்தையை விரும்பினான். அவளும் அவனை விரும்பினாள். ஜெயசந்திரன் அவர்களுக்கு மணம் செய்து வைக்க விரும்பவில்லை. அவன் சம்யுக்தைக்கு சுயம்வரம் நடத்தினான். அச்சுயம்வரத்திற்கு எல்லா மன்னர்களுக்கும் அழைப்பு அனுப்பினான். ஆனால் பிருத்விராஜனுக்கு மட்டும் அனுப்பவில்லை.

ஜெயசந்திரன் பிருத்விராஜை அவமானப்படுத்த அவனைப் போல ஒரு பதுமையைச் செய்து சுயம்வர மண்டபத்தின் நுழை வாசலில் நிறுத்தி வைத்தான். சம்யுக்தை அந்த சிலைக்கு மாலை போடவரவே

அங்கு மறைந்திருந்த பிருத்விராஜ் அவளைத் தூக்கிக் குதிரை மீது ஏற்றிக்கொண்டு டில்லிக்குப் போய் அவளை மணந்து கொண்டான். இது கி.பி. 1175 ல் நடந்தது.

துருக்கிய இனகோரி மன்னனான மகம்மது கோரி கி.பி 1192 ல் டில்லி மீது படை எடுத்து வந்தான். பிரித்வி ராஜ் அவனைப் போரில் தோற் கடித்து சிறைப்படுத்திய போதிலும் மனிதாபிமானம் கொண்டு அவனை விடுதலை செய்து அவனது நாட்டிற் குத் திரும்பிச் செல்லவும் அனுமதித் தான்.

ஆனால் மறு ஆண்டிலேயே கோரி ஜெயசந்திரனின் உதவியுடன் டில்லி மீது படை எடுத்தான். அவன் பிரத்விராஜைத் தோற்கடித்து அவனைச் சிறைப்பிடித்து அவனைக் கொன்றான். இதற்கு ஓராண்டிற்குப் பின் கன்னௌஜ் மீது கோரி படை எடுத்துப் போய் ஜெயசந்திரனைத் தோற்கடித்து அவனது நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். ஆனால் கோரியும் சில நாட்களுக்குப் பிறகு கலகக்காரர்களால் கொல்லப் பட்டான்.

முகலாயர்கள் தாம் டில்லியை ஆண்டவர்களில் புகழ் பெற்றவர் கள். ஆங்கிலேயர்கள் கல்கத்தாவிலி ருந்து தம் தலை நகரை 1911 ல் மாற்றி டில்லியைத் தலை நகராகக் கொண்டு ஆண்டு வந்தார்கள். நம் நாடு 1947 ல் சுதந்திரம் பெற்றபின் டில்லி தான் நாட்டின் தலைநகராக இருந்து வருகிறது.

பார்ப்பவர்களைப் பரவசப்படுத் தும் வரலாற்றுப் புகழ் கொண்ட கட்டடங்களும் சின்னங்களும் டில்லி மாநகரில் உள்ளன. இன்றைய டில்லி நகரின் மக்கள் தொகை 95 லட்சம் இந்நகரின் பரப்பளவு 1483 சதுர கி.மீட்டர். ஹிந்தி, பஞ்சாபி, உருது, ஆங்கிலம், ஆகிய மொழிகளைப் பேசுபவர்களே இங்கு அதிகமாக உள்ளனர். நாட்டின் தலைநகரென இதற்குத் தனிச்சிறப்பு உண்டு. எழுபது உறுப்பினர்கள் கொண்ட ஒரு சட்ட மன்றமும், மந்திரி சபையும் இதற்கு உண்டு.

டில்லி நம் நாட்டின் அரசியல் தலைநகர் மட்டுமல்ல, சுற்றிலும் பலவிதத் தொழில்கள் பெரும் அளவில் செய்யப்படுகின்றன. வட இந்தியாவின் முக்கிய வணிகத் தலமாயும் இது உள்ளது.



# கடன்பட்டவன் நெஞ்சம்

கிளியூர் கிராமப் பஞ்சாயத்துத் தலைவர் கிருஷ்ணசாமி அன்று வழக்கம்போல் ஊர் மத்தியிலுள்ள அரச மரத்தடியே அமர்ந்து சிலருடன் பேசிக் கொண்டிருந்தார். அப்போது அவ்வூர் வட்டி வியாபாரி வைத்தியலிங்கம் அங்கு வந்து அவரிடம் ''ஐயா! அடுத்த ஊரிலுள்ள அண்ணாமலை என்னிடம் கடன் வாங்கிவிட்டு அதைக் கொடுக்காமல் ஏமாற்றிக் கொண்டு திரிகிறான். அவனை அழைத்து விசாரித்து என் பணத்தை நீங்கள் தான் வாங்கிக் கொடுக்க வேண்டும்'' என்றான்.

பஞ்சாயத்துத்தலைவரும் ''கவலைப்படாதீர்கள். அவனை அடுத்த ஊரிலிருந்து இங்கே இழுத்து வர நம் ஊர்க்காவலாளி வீரப்பனை அனுப்புகிறேன். வீரப்பனிடமிருந்து அவன் தப்ப முடியாது. நாளை அவன் அண்ணாமலையை இங்கே கொண்டுவந்து நிறுத்துவான். உடனே விசாரித்து உங்கள் பணம் உங்களுக்குக் கிடைக்கும்படி நியாயம் வழங்குகிறேன் என்று கூறி அனுப்பினார்.

மறுநாள் காலை பஞ்சாயத்துத் தலைவரின் கட்டளையின் பேரில் வீரப்பன் அடுத்த ஊருக்குப் போய் அண்ணாமலையைத் தேடிக் கண்டு பிடித்து அவ்வூரிலிருந்து கிளியூருக்கு நடத்திச் சென்றான். அப்போது வெயில் கடுமையாக இருந்தது. வழியில் வீரப்பன் அண்ணாமலையிடம் ''வெயில் அதிகமாக இருக்கிறது. கொஞ்ச நேரம் இந்த மரத்தடியே இருந்துவிட்டுப் போகலாம்'' என்றான்.

அண்ணாமலையோ ''வேண்டாம். உன் வேலைதான் கெடும். அதோ அந்த மரத்தடியே நான்கு பேர்கள் நின்று கொண்டிருக்கிறார்களே அவர்களும் எனக்குக் கடன் கொடுத்தவர்கள். என்னைப் பிடித்துக் கொண்டு போகவே வந்து கொண்டிருக்கிறார்கள். அதனால் நாம் இங்கே நிற்காமல் முதலில் உங்கள் ஊருக்கே போய் விடலாம்'' என்றான்!



# கண்டு பிடியுங்கள் எழுதுங்கள்

இந்த இதழில் பிரசுரிக்கப்படும் வினாக்களுக்கு அடுத்த இதழில் விடைகள் வெளியிடப்படும். இதற்குள் நீங்கள்கூட அவ்வினாக்களுக்கு விடைகளை எழுதி அனுப்பலாம். ஆனால் விடைகளை அனுப்ப நீங்கள் ஆக்கபூர்வமான முயற்சி செய்ய வேண்டும். முந்திய இதழிலுள்ள கதைகளை கவனமாகப் படியுங்கள். அக்கதைகளில் உங்களுக்கு மிகவும் பிடித்தகதையை தெரிவித்து அக்கதை உங்களுக்கு ஏன் பிடித்தது என்பதை விவரித்து 20 வாக்கியங்களுக்கு மேல் போகாமல் ஒரு கட்டுரையை உங்கள் விடையை அளிக்கும் விதத்தில் எழுதி அனுப்ப வேண்டும். உங்கள் வயது, மாணவர் அல்லது மாணவியானால் நீங்கள் படிக்கும் வகுப்பு, கல்வி நிறுவனம், உங்கள் முழு முகவரி ஆகியவற்றை எழுதி விடையின் கீழ் நீங்கள் கையொப்பம் இட வேண்டும். உங்கள் ஆசிரியரோ அல்லது உங்கள் தாய் தந்தையரில் ஒருவரோ கையொப்பம் இட வேண்டும். விடைகளை பாரத தரிசனம் வாசகர்கள் போட்டி, சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை 600 026 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

**முதல் பரிசு ரூ 1000/-**
**இரண்டாவது பரிசு ரூ 500/-**
**மேலும் ஆறு ஊக்கப் பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ 200/-**







**பாரத தரிசனம் வாசகர்களுக்குப் போட்டி**

நாட்டின் மீது படை எடுத்து வந்த எதிரி, மன்னனைக் கடத்திக் கொண்டு சென்றான். அப்படிச் செய்த எதிரியை ராணி மணம் செய்து கொண்டாலே மன்னன் விடுதலையாவான் என்ற தகவல் ராணிக்குக் கிடைத்தது. தோழிகள் உடன் வர ராணி எதிரிகளுள்ள கூடாரத்தை நோக்கிப் புறப்பட்டாள். எதிரிகள் கூடாரத்தை அடைந்ததும் பல்லக்கிலிருந்து இறங்கியவர்கள் ராணியின் தோழிகளல்ல. மின்னல்போல வீரர்கள் எதிரிகளின் மீது பாய்ந்து அவர்களைக் கொன்றனர். ராணி மன்னனை விடுவித்தாள். அதன் பின் இருவரும் அங்கிருந்து தப்பி தம் கோட்டையை அடைந்தார்கள்.

**இந்த வரலாற்றுப்புகழ் நிகழ்ச்சியில் ராணி யார்? மன்னன் யார்? இது எப்போது நிகழ்ந்தது?**

**நம் புராணங்களில் இந்த ஜோடிகளுக்கிடையே உள்ள தொடர்பு என்ன என்று தெரியுமா?**




**விஞ்ஞானமும் இந்திய மொழிகளில்**

# பரிசுகளை வெல்லுங்கள்

...சனம்
...ப் போட்டி



1. உலகிலேயே முதன் முதலான கற்பனைக் கதைத் தொகுப்பு எனப் பெயர் பெற்ற நூல் எது? இதன் ஆசிரியர் யார்?

2. உலகிலேயே முதன் முதலான கதைத் தொகுப்பு எனப் பெயர் பெற்ற நூல் எது? அதன் ஆசிரியர் யார்?

3. உலகிலேயே முதன் முதலான நீதிக் கதைகளின் தொகுப்பு எனப் பெயர் பெற்ற நூல் எது? இதன் ஆசிரியர் யார்?

4. மிக அதிகமாகப் படிக்கப்படும் இந்திய மத நூல் எது?

5. பழங்கால இந்திய இலக்கியங்களை நான்கு பிரிவுகளாகப்பிரித்தனர். அவை யாவை?




**விதிகள்!**

1. சந்தமாமா இந்தியா லிமிடெட்டில் வேலை பார்ப்பவர்கள், அவர்களது உறவினர்கள் இப் போட்டியில் கலந்து கொள்ளக் கூடாது.

2. நடுவர்கள் அளிக்கும் தீர்ப்பே முடிவானது. இது பற்றி எவ்விதக் கடிதப்போக்குவரத்தும் கிடையாது.

3. கையெழுத்து தெளிவாக இல்லாதவை ஏற்கப்படமாட்டா.

4. போட்டி முடிவுகள் மே இதழில் வெளியிடப் படும்.

5. விடைகள் பிப்ரவரி 27தேதிக்குள் எமக்குக் கிடைக்க வேண்டும்.

1. பீமன் - சிசுபாலன்
2. ஜராசந்தன் - கம்சன்
3. பீஷ்மர் - விசித்திரவீரியன்
4. அசுவத்தாமன் - கிருபாசாரியார்
5. விதுரர் - சுகர்

**விநோதமும் மிளிர**
**அம்புலிமாமாவே தனிச் சிறப்பானது.**

# இப்படியும் நடக்குமா!

ஒரு நாள் ஒரு வியாபாரி பணப் பையுடன் வீட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்த போது ஒரு இளைஞன் சட்டெனப் பாய்ந்து வியாபாரியிடமிருந்து பையைப் பிடுங்கிக் கொண்டு ஓடலானான். வியாபாரி ''திருடன், திருடன், பிடி, பிடி'' என்று உரக்கக் கத்தவே சிலர் அந்த இளைஞனைத் துரத்தி பிடித்து அவனை காவலதிகாரியிடம் அவர்கள் ஒப்படைத்தார்கள். அந்த இளைஞன் காவலதிகாரியின் கால்களில் விழுந்து ''தெரியாமல் செய்து விட்டேன். என்னை மன்னியுங்கள்'' என்று கெஞ்சினான். காவலதிகாரியோ ''தெரியாமலா செய்தாய் திருட்டுப்பயலே'' என்று உறுமியவாறே அவனைத் தன் காலால் எட்டி உதைத்தார். அவன் சற்று தூரத்தில் போய் விழுந்தான். அப்படி விழுந்த மறு கணமே அவன் எழுந்து வேகமாய் தப்பி காட்டுக்கு ஓடி விட்டான்.

அவன் காட்டுக்குள் தட்டுத் தடுமாறி நடந்ததால் அவன் காலில் ஏதோ இடற. குப்புற பாறாங்கல் மீது விழுந்தான். மயக்கமானான்.

சற்று நேரத்திற்குப்பின் பக்கத்திலிருந்த அந்தக் குடிசையிலி ருந்த முனிவர் வெளியே வந்தபோது இளைஞனைப் பார்த்தார். தண்ணீர் கொண்டு வந்து அவனது முகத்தில் தெளித்தார். பிறகு அவனை எழுப்பி தன் குடிசைக்கு அழைத்துச் சென்றார்.

அந்த முனிவரின் குடிசையில் சில நாட்கள் இருந்த அவன் முனிவரிடம் ''சுவாமி! நான் இங்கேயே இருந்து தங்களுக்குப்



பணிவிடைகள் புரியவே விரும்பு கிறோன். எனக்கு இதற்கு அனுமதி அளிக்க வேண்டும்'' என்று வேண்டினான். அவரும் அனுமதிக்கவே, அந்த இளைஞன் அவரது வாழ்க்கை முறையை கண்டு தன் போக்கையும் மாற்றிக் கொண்டு வந்தான்.

சில ஆண்டுகள் கழிந்தன. முனிவரும் பரலோகப் பிராப்தி அடைந்தார். அதன்பின் இளைஞனான அவரது சீடன் சதானந்த சுவாமி என்ற பெயருடன் அங்கே யே இருக்கலானான். அவனது புகழ் எங்கும் பரவியது.

சதானந்தருக்கு சில சீடர்கள் ஏற்பட்டனர். அவர்கள் ஒருநாள் சதானந்தரை வற்புறுத்தி நகருக்கு அழைத்துச் சென்றார்கள். அவரைக் காண அந்த நகர மக்கள் வந்தனர். மக்கள் அமர்ந்து அமைதியாக அவர் சொல்வதைக் கேட்டனர். பின்பு கூட்டத்திலிருந்து ஒரு கிழவன் சதானந்தரை தனியாகச் சந்தித்து ''சுவாமிகளே! நான் பகவானின் திருவடிகளை அடைந்தால் அதையே என் பெரும்பாக்கிய மாகக் கருதுவேன். நான் இவ்வூர் காவலதிகாரியாகப் பணிபுரிந்த போது குற்றவாளிகளை துன்புறுத்தி இருக்கிறேன். அதனால் தான் பகவான் எனக்கு அருள் புரிவாரா என்று சந்தேகப்படுகிறேன்'' என்றான்.

சதானந்தரும் ''அன்பரே! கண்டிப் பாக உங்களுக்கு அவரது அருள்



கிட்டும். ஒரு காலத்தில் நானும் குற்றவாளியாகி உங்கள் முன் நின்று உங்கள் காலால் உதையும் வாங்கி இருக்கிறேன். அன்று உங்கள் காலில் நான் விழுந்தேன். இன்று நீங்கள் என் காலில் விழுகிறீர்கள். என்ன விசித்திரம் பார்த்தீர்களா? பகவானால் ஒரு திருடனுக்கு அருள் புரிய முடிந்ததென்றால் திருடனைத் தண்டிக்கும் காவலதி காரிக்குக் கருணை காட்டாமலா இருப்பார்?'' என்று கூறி தன் பழைய கதையைக் விவரமாக சொன்னார்.

கிழவனின் கண்களில் கண்ணீர் ததும்பியது. சதானந்தரை வணங்கியவாறே சிலைபோல் நின்றான்.






## சென்ற நூற்றாண்டின் கடைசி காலனி

அகிம்சா வழியிலோ அல்லது வன்முறையின் மூலமோ புரட்சி செய்யாமலேயே சுதந்திரம் பெற்ற காலனி எது தெரியுமா?

சீனாவுக்கு சொந்தமான மாக்கோ என்ற தீவுதான் அது. கடந்த 442 ஆண்டுகளாக இந்தத் தீவானது போர்த்துகீசியர் வசம் இருந்தது.

ஆசியாவுக்கும், ஐரோப்பாவுக்கும் இடையே உள்ள சிறந்த வணிகத்தலமாக இது விளங்கியது. சீனா இந்தத் தீவினால் அதிகம் பயன டைந்தது. ஏராளமான சீன நாட்டுப் பொருட்கள் மாக்கோவின் ஊடாக ஐரோப்பாவுக்கு அனுப்பப் பட்டன.

இந்தியாவின் கோவா மாநிலமும் ஒரு போர்த்துகீசிய காலனியாக இருந்தது. ஆனால் அது சுதந்திரம் பெறு வதற்காக கொஞ்சம் பிரயாசை செய்ய வேண்டியிருந்தது.

ஆனால் போர்த்து க்கல் தானாகவே முன்வந்து மாக்கோவை சீனாவிடம் ஒப்படைத்து விட்டது.

மாக்கோவின் மொத்த ஜனத்தொகை 4,36,000 ஆகும். இதுவே 20ஆம் நூற்றாண்டில் சுதந்திரம் பெற்ற கடைசிக் காலனி ஆகும்.

19-12-1999 இரவில் இது நடந்தது. மாக்கோ பாதுகாப்புப்படையைச் சேர்ந்த நான்கு அதிகாரிகள் தேசக் கொடியை இறக்கி போர்த்துக்கீசிய ஆளுனர் திரு.வாஸ்கோ ரோச்சா வியராவிடம் கையளித்தனர்.

அவர் இக் கொடியை லிஸ்பனில் உள்ள மாக்கோ கலாச்சார ஆய்வு மையத்தில் பார்வைக்கு வைப்பதற்காக ஒப்படைப்பார்.

''500 வருட வரலாறானது ஒரு சினிமாப்படம் முடிவதைப் போல சில விநாடிகளில் நடந்து முடிந்தது'' என்றார் போர்த்துக்கல் நாட்டின் ஜனாதிபதியான ஜார்ஜ் சாம்பாயோ அவர்கள்.





# சென்ற நூற்றாண்டின் பரிசு








1914இல் பனாமா கால்வாய் திறக்கப் பட்ட போது வரலாற்றின் மிகப்பெரும் சாதனைகளில் அதுவும் ஒன்றாகப் பேசப் பட்டது. பனாமா என்ற நாட்டின் ஊடாகச் செல்லும் 50 மைல்கள் நீளமான இந்தக் கால்வாய் பசுபிக் சமுத்திரத் தையும் அட்லாண்டிக் சமுத்திரத்தையும் இணைத்தது.

இக் கால்வாயைத் தோண்டும் பணியில் ஈடுபட்டிருந்த போது கிட்டத் தட்ட 6000 தொழிலாளர்கள் இறந்தனர். நியூயார்க்குக்கும், சான்பிரான்சிஸ்கோவு க்கும் இடையேயான கடல் பிரயாணப் பாதையின் தூரத்தை பனாமா கால்வாயா னது 8000 மைல்களினால் குறைத்தது. இதனால் பொருட்கள் அனுப்பப்படும் போது எத்தனையோ மடங்கு விரைவாக உரிய இடத்தை அவை வந்து சேர்ந்தன.

ஐக்கிய அமெரிக்காவின் ஜனாதிபதி யாக இருந்த ரூஸ்வெல்டின் அறிவார்ந்த திட்டமிடலின் பயனே இந்த பனாமா கால்வாய்.

பனாமா கால்வாயை அமெரிக் கர்களே நிர்வகித்தனர். அது அமெரிக் காவின் சொத்தாக இருந்தது. இக் கால்வாயின் அணைகளின் ஓரம் சின்னச் சின்ன அமெரிக்க காலனிகள் தோற்றம் பெற்றன. இங்குள்ள காடுகளில் அமெ ரிக்க ராணுவப் பயிற்சிகள் நடந்ததோடு அங்கே ராணுவ தளவாடங்களும் வைக்க ப்பட்டன. காட்டுக்கு விறகு பொறுக்க வரும் அந்தப்பகுதி மக்களில் சிலர் ராணுவத்தினரால் தவறுதலாக கொல்ல ப்பட்டிருக்கிறார்கள். இது பனாமா மக்க ளுக்கு ஆத்திரமூட்டியது.

தற்போது இக் கால்வாய் தனது முக்கியத்துவத்தை இழந்துள்ளது. இன் றைய காலகட்டத்தில் பொதுவாக சரக்கு விமானங்கள் மூலமும், சாலை வழியாக வும் பொருட்கள் எடுத்துச் செல்லப்படு கின்றன.

அது மட்டுமின்றி பல நவீன கப்பல் களினால் அவற்றின் பெரிய அமைப்பு காரணமாக பனாமா கால்வாய் ஊடாக செல்ல முடியவில்லை.

பனாமா நாட்டவர்கள் பனாமா கால்வாய் மீது உரிமை பாராட்டி னார்கள்.

1977இல் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த ஜிம்மி கார்ட்டர் பனாமாவுக்கு கால்வாயைத் திருப்பித் தரும் உடன்படிக் கையில் கையெழுத்திட்டார்.

31-12-99இல் சம்பிரதாய முறைப்படி இந்த ஒப்படைப்பு நடைபெற்றது.

# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.



போட்டோவாக்கியப்
போட்டி
அம்புலிமாமா
வடபழனி
சென்னை-600 026.





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி பிப்ரவரி 25-ம் தேதிக்குள் மேலே உள்ள முகவரிக்கு வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் 2000 ஏப்ரல் மாத இதழில் வெளியிடப்படும்.
சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

## வாழ்த்துக்கள்



டிச. '99 போட்டியில் பரிசு
பெற்றவர் :
**செல்வி ஸ்ரீ சக்தி அபிராமி**
மே/பா : சு. அருணாசலம் பிள்ளை
27, சாலைத் தெரு,
கொக்கிரகுளம் - 627 009.



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ : இருக்க விடு! இனிது ரசிக்கலாம்!
இரண்டாவது போட்டோ : பறக்கவிடு! பார்த்து ரசிக்கலாம்!